# சிலப்பதிகாரத்தில் விழாக்கள்



கா. ம. பா[illegible]ஜி

நல்பெற்றோருக்கு பிள்ளையாக்கி நல்ல அறிவை
எனக்கு கொடுத்து நூல் வெளியிட செல்வம் தந்து
தமிழ் நல்லுலகுக்கு அறிமுகம் செய்த எல்லாம் வல்ல
திருவேங்கடவனுக்கு காணிக்கை

# சிலப்பதிகாரத்தில் விழாக்கள்

கா. மு. பாபுஜி, எம்.ஏ., எம்.பில்., பி.எட்.,

நூல் கிடைக்குமிடம் :

பாரி நிலையம்,
184, பிராட்வே,
சென்னை-108.

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
79, பிராட்வே, சென்னை-108.

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the book | : | Festivals in Cila-p-pathikaram |
| Language | : | TAMIL |
| Edition | : | FIRST 1991 |
| Author | : | K. M. BAPUJI |
| Copyright | : | Author |
| Paper used | : | TNPL. 63 GSM |
| Size of the book | : | DEMY OCTAVO |
| Printing Points | : | 12 PTS |
| No of Pages | : | 138 + xvi |
| No of Copies | : | 1000 |
| Printers | : | AVVAI ACHUKKOODAM, MADRAS-13 |
| Binding | : | LIMP |
| Price | : | Rs. 25/- |
| Subject | : | LITERARY CRITICISM |
| Call Number | : | 031, 1 B 82 : 9 (Y : 36) N 91 |

# அணிந்துரை

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்,
துணைவேந்தர் தமிழ்ப் பல்கலைக்கழகம் தஞ்சாவூர்-613 005

தமிழ் இலக்கியத்தில் தனியிடம் பெற்றுத் திகழ்வது சிலப்பதிகாரம் எனும் காப்பியம். தமிழ்க் காப்பிய உலகில் சிலப்பதிகாரமே முதற் காப்பியமாகும். இம் முதற் காப்பியம் கண்ணகி எனும் வணிகர் குடியில் பிறந்த பெண்ணைக் காவியத் தலைவியாகக் கொண்டு மிளிர்வதாகும். இக் காப்பியத்தில் பழந் தமிழர்கள் பாங்குற கொண்டாடிய விழாக்களும் விரிவாக இடம்பெற்றுள்ளன. 'விழா' என்ற சொல்லே விரும்பிக் கொண்டாடப்படுவது என்ற பொருளில் குறிப்பிடப்படுகின்றது. விழ்-என்ற சொல்லுக்கு விருப்பம் என்று பொருளாகும். அந்த அடிப்படையில் விழா என்றால் விரும்புகின்ற ஒன்று என்று ஆகிறது.

'சிலப்பதிகாரத்தில் விழாக்கள்' எனும் தலைப்பில் அமைந்த இந் நூல் நான்கு இயல்களைக் கொண்டுள்ளது. 'விழா-விளக்கம்' என்ற முதற் தலைப்பின்கீழ் விழா என்னும் சொல்லின் விளக்கம், தோற்றம் கொண்ட வரலாறு, விழாவின் நோக்கம், விழாவின் வகைபாடுகள், பயன்பாடுகள், விழாவோடு தொடர்புடைய பிற செய்திகள் அனைத்தும் ஆராயப் பட்டுள்ளன.

'சங்க இலக்கியத்தில் விழாக்கள்' என்ற தலைப்பின்கீழ்ப் பத்துப்பாட்டு எட்டுத்தொகையில் காணலாகும் சமய சமுதாய விழாக்கள் விரிவாக எடுத்துரைக்கப்படுகின்றன.

மூன்றாம் இயலில் — 'சிலம்பில் சமய விழாக்கள்' என்ற இயலில் 'இந்திர விழா', 'காமன் விழா', 'கொற்றவை விழா', 'முருகன் விழா', 'திருமால் விழா' முதலான விழாக்களைப் பற்றி விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

இறுதி இயலில் சமுதாய விழாக்கள் தொகுத்துரைக்கப் பெறுகின்றன. 'கோவலன்-கண்ணகி திருமண விழா, மாதவி

ஆடல் அரங்கேற்ற விழா' மணிமேகலையின் பெயர் சூட்டு விழா' முதலியன செவ்வியின் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

ஆய்வு நிறைஞர் (எம். ஃபில்.) எனும் பட்டப் பேற்றிற்காக, திருப்பதி, திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையில் இளைஞர் திரு. கா. மு. பாபுஜி அவர்கள் 'சிலப்பதிகாரத்தில் விழாக்கள்' எனும் ஆய்வுத் தலைப்பினைத் தேர்ந்தெடுத்து அதன் விளைவாக இந்நூல் உருப்பெற்றுள்ளது. இந் நூலில் இவ் இளைஞரின் அரிய உழைப்பினையும் உரிய அணுகுமுறையினையும் ஒருங்கே காணலாம். இளைஞர் பாபுஜிக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது என்பதை இந்நூல் உணர்த்துகின்றது. இவர் என் அருமை நண்பர் சான்றோர் முனைவர் பொன். சௌரிராசன் அவர்களுடைய திருப்பார்வை பெற்றவர். எனவே இவர் இப்படித்தான் வாழவேண்டும் என்ற கொள்கை நெறி நின்று தமிழ்ப் பணி ஆற்றுவார் என்று நம்புவதற்கு இடம் இருக்கின்றது. இளைஞர் திரு. பாபுஜி அவர்களின் முயற்சியினை நான் பாராட்டுகின்றேன். இந் நூலினைத் தமிழ் உலகு ஏற்றுக்கொள்ளும் என்று நம்புகின்றேன்.

வாழ்த்துகள்.

சி. பாலசுப்பிரமணியன்

# ஆய்வுரை

டாக்டர் பொன். சௌரிராசன்
வருகைதரும் பேராசிரியர்
திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி

தேன் இனியது; குருதிக்கு இரும்புச் சத்துத் தந்து உயிரை வளர்ப்பது. அப்படித்தான் சிலப்பதிகாரமும் கற்பதற்கு இனியது; கற்றவர்க்குத் தமிழ் உணர்வை, பண்பாட்டைத் தந்து அவரையும் நாட்டையும் உலகையும் உய்விப்பது.

மனிதனாகப் பிறந்தவன் ஒவ்வொருவனும் பிறவியில் தவறாது கற்க வேண்டிய நூலாகத் திருக்குறள் எவ்வாறு திகழ்கிறதோ அப்படியே தமிழனாகப் பிறவியெடுத்த ஒவ்வொருவனும் தவறாது உணர்ந்துய்க்க வேண்டிய காப்பியம் சிலப்பதிகாரம் ஆகும்.

தமிழர் வாழ்வை, வளத்தை எண்ணி எண்ணி இரக்கத்துடனும் அருளுணர்வோடும் துறவி இளங்கோ படைத்த காப்பியம் அது. பண்டைத் தமிழர் வாழ்வை வரலாற்றை அதன்வழி நன்கு அறிந்து கொள்ள இயலும்; தற்கால வாழ்வை நன்கு அமைத்துக் கொள்ள இயலும்; எதிர்கால உலகையும் அதன் வழி உருவாக்க இயலும்.

சமயச் சறுக்கால் தடுமாறும் இன்றைய இந்தியாவுக்குச் சரியான வழிகாட்டி சிலப்பதிகாரமே. சமயப் பொறையை அது எவ்வளவு அழகாக கதை மாந்தர் வழியே புலப்படுத்துகிறது.

பெண்மைக்குப் பெருமை சேர்த்த முதல் உலகக் காப்பியமும் அதுவே. மனிதன் தவறு செய்வது இயற்கையே. ஆனால் தவறை உணர்பவனே உணர்ந்து திருந்துபவனே வாழ, வளரத் தகுதியுடையவன், எனத் தெளிவு செய்யும் காப்பியமும் அதுவேயாகும்.

அந்தக் காப்பியத்தைக் காண்பார் பலர். கற்றோர் பலர் கற்பித்தோர் பலர். ஆய்ந்தோர் பலர். தோய்ந்தோர் பலர். நூற்றுக்கணக்கான நூல்கள் ஆய்வுகள் அது பற்றி எழுந்துள்ளன; என்றாலும் அந்த இலக்கியச் சுரங்கம் இன்னும் எழுத்

தாளன், ஆராய்ச்சியாளன், படைப்பாளன் எதிர்பார்ப்பது அனைத்தையும் சுரந்து கொண்டுதான் உள்ளது. இந்த உண்மையைத் தொடர்ந்து அதுபற்றி இன்று எழுந்துள்ள எழுத்துக்கள் எல்லாம் உறுதிசெய்யவல்லன.

இந்தச் சுரங்கத்தில் ஊறும் இலக்கிய ஊற்றில் ஆழங்கால் பட்டவர்கள் அமரர்களாகிவிடுவர். அவ்வாறு ஆழங்கால்படவில்லை என்றாலும் துணிவோடு இறங்கி ஒருகை முகர்ந்து பருகி அந்த அனுபவத்தைத் தமிழ்கூறும் நல் உலகோடு பகிர்ந்துகொள்கிறார் இந்த ஆய்வாளர். இதனை ஏற்றுப் போற்றும் வழி மேலும் மேலும் அவர்க்கு ஊக்கம் தந்து, இந்த இலக்கியச் சுரங்கத்தில் இறங்கி மூழ்கி மூழ்கி அவர் முகிழ்த்தெழ உதவியருள வேண்டும் எனத் தமிழ் நெஞ்சினைக் கேட்டுக் கொள்வன். இவர் இன்னும் கற்று, நன்கு சிந்தித்து, அரிய பல நூல்களை ஆக்கும் வல்லராகுமாறு வாழ்த்துகிறேன்.

பொன். சௌரிராசன்

# வாழ்த்துரை

இளமைக் காலம் என்பது ஒருவருடைய வாழ்க்கையில் பூஞ்சோலை போன்றது ஆகும். துன்பம் போராட்டம் போன்ற புயல்கள் வீசும் போது செடியில் பூத்திருக்கும் மணமிக்க மலர்கள் மண்ணில் விழுந்து, அழகிழந்து, கசங்கிப்போய், பயனற்று போகிறது. அந்தப் பூஞ்சோலையைக் காக்க வேண்டிய தேவை அனைவர்க்கும் உண்டு.

என்னுடைய மாணவ நண்பர் கே. எம். பாபுஜி இளைஞர். ஆர்வம் மிக்கவர். அயராது இலக்கியத்திற்காக உழைப்பவர். அனைவரிடமும் பழகும் இனிமையாளர். 'கற்க கசடற' என்று வள்ளுவர் கூறுவதற்கு ஏற்றாற்போல் கற்பதை நன்கு கற்று, கசடு அறக் கற்று அதன் சாரத்தை உலகுக்கு அளிப்பவர். ஆகையால் தற்சமயம் அவர் நூல் வெளியீட்டில் தமது கவனத்தைத் திருப்பியுள்ளார்.

நல்ல முயற்சியும் ஆழ்ந்த படிப்பும் உடைய அவர் இந்த நூல் வாயிலாக பலரையும் சந்திக்க இருக்கிறார். அவருடைய உழைப்பு அவருக்கு நற்பெயரைத் தேடித் தர வேண்டும் என்று இறைவனை வணங்கி வாழ்த்துகிறேன்.

வாழ்க அவர் தமிழ்த் தொண்டு
வெல்க அவர் முயற்சிகள்.

டி. ஜெ. இரகுபதி
(டி. ஜெ. ஆர்.)

# நன்றியுரை

எனது வளர்ச்சியில் தொடர்ந்து அக்கறை காட்டி என்னை நெறிப்படுத்தும் எனது வழிகாட்டி முனைவர். தா. செ. இரகுபதி அவர்களுக்கு நன்றி. தன்னைப்போல் பிறரும் வாழவேண்டும் என்ற பரந்த நோக்கம் கொண்டு, தன்னை நாடி வந்தோருக்கு நல்வழிகாட்டும் எனது பேராசிரியர் முனைவர் பொன். சௌரி ராஜன் அவர்கள் இந்நூல் வெளிவர பல்வகையில் உதவி செய்ததோடு இந்நூலுக்கு அழகு சேரும் வண்ணம் ஆய்வுரை வழங்கியுள்ளார். அவருக்கு என் நன்றி என்றும் உரித்து. இந்நூலுக்கு மணிமுடி சூட்டும் வண்ணம் அழகியதோர் அணிந் துரை வழங்கிய தமிழ்த்தொண்டே தலைமைத் தொண்டாக கொண்டுள்ள அன்புப் பெருந்தகை முனைவர் சி. பாலசுப்பிர மணியன், அவர்களுக்கு நன்றி கூற கடமை பட்டுள்ளேன். இவ்வாய்வுக்கு பல புத்தகங்களை கொடுத்து, சில கருத்து களையும் கூறிய பேராசிரியர் முனைவர் தேவசங்கீதம். முனைவர் தர்மாரெட்டி, முனைவர் மனுவேல் ஆகியோருக்கு நன்றி.

எனது ஆய்வு, நூல்வடிவில் வெளிவர உதவியாக இருந்த சப்தகிரி ஆசிரியர் திரு. இராமமூர்த்தி, மற்றும், முனைவர் வ. ஜெயதேவன், இணைப் பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம் ஆகியோரது அன்புக்கு என்றும் நன்றி உடையேன்.

இவ்வாய் வேட்டினை நூலாக வெளியிட அனுமதியளித்த திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்கும், இந்நூல் வெளியிட நிதி உதவி வழங்கிய திருப்பதி திருமலை தேவஸ்தானத்திற்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலை நல்ல முறையில் அச்சிட்டுத் தந்த அவ்வை அச்சுகூடத்தின் உரிமையாளர். திரு. V. சேஷாசலம் அவர் களுக்கு என் அன்பும் நன்றியும் என்றும் உரியது.

எனது கன்னி முயற்சியான இந்நூல் சிறக்கச் செய்ய என்னுடன் சீரியமுறையில் ஒத்துழைத்த எல்லா உயர்ந்த உள்ளங்களுக்கும் நெஞ்சம் நிறைந்த நன்றி கூறி மகிழ்கிறேன்,

கா. மு. பாபுஜி

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ.ந. | — | அரும்பதவுரை |
| அக. | — | அகநானூறு |
| அ.ந.உ. | — | அடியார்க்கு நல்லாருரை |
| ஆசா. | — | ஆசாரக் கோவை |
| இ.ப. | — | இரண்டாம் பதிப்பு |
| இறை. | — | இறையனார் அகப்பொருள் உரை |
| உ.க. | — | உரைபெறு கட்டுரை |
| க.ஆ.கோ. | — | கருத்தரங்கு ஆய்வுக் கோவை |
| கழகம் | — | திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். |
| கலி. | — | கலித்தொகை |
| குறி. | — | குறிஞ்சிப்பாட்டு |
| குறு. | — | குறுந்தொகை |
| சிலம்பு. | — | சிலப்பதிகாரம் |
| சிறுபா. | — | சிறுபாணாற்றுப்படை |
| திரு. | — | திருக்குறள் |
| திருமுரு. | — | திருமுருகாற்றுப்படை |
| தொ. | — | தொகுதி |
| தொ.ஆ. | — | தொகுப்பு ஆசிரியர் |
| தொல். பொருள். | — | தொல்காப்பியம் — பொருளதிகாரம் |
| நற். | — | நற்றிணை |
| நால. | — | நாலடியார் |
| நூ. | — | நூற்பா |
| நெடு. | — | நெடுநல் வாடை |
| ப. | — | பக்கம் |
| பக். | — | பக்கங்கள் |
| பட். | — | பட்டினப்பாலை |
| பதி. | — | பதிப்பு |

| | | |
|---|---|---|
| பதிற். | — | பதிற்றுப்பத்து |
| பரி. | — | பரிபாடல் |
| பா. | — | பாடல் |
| புற. | — | புறநானூறு |
| பெரு | — | பெரும்பாணாற்றுப்படை |
| பொ.ஆ. | — | பொதுபதிப்பாசிரியர் |
| மணி. | — | மணிமேகலை |
| மது. | — | மதுரைக்காஞ்சி |
| ம.ப. | — | மறுபதிப்பு |
| மலை. | — | மலைபடுகடாம் |
| மு.நூ. | — | முன்காட்டிய நூலிலிருந்து |
| மு.ப. | — | முதற்பதிப்பு |
| முல். | — | முல்லைப்பாட்டு |
| C.E. | — | Chief Editor |
| Ed. | — | Editor |
| Op.Cit. | — | Opera Citato |
| P. | — | Page |
| Vol. | — | Volume |

# முன்னுரை

## ஆய்பொருள்

யான் சிறு பருவத்திலிருந்தே சமயத்தின் மீது மிகுந்த பற்றுடையவன். எனவே, அச்சமயத்தின் சிறப்பை எவ்வகையிலாவது உலகிற்குக் காட்ட வேண்டும் என்ற எண்ணம் நிலவி வந்தது. அதே நேரம் முதுகலை படிக்கும் போது சிலப்பதிகாரம் கற்கும் வாய்ப்பு ஏற்பட்டது. அப்போது வகுப்பறையில் சிலப் பதிகாரத்தை நடத்திய பேராசிரியர் பொன். சௌரி ராசன் அவர்களின் சொற்சுவையும், சிலம்பின் முச் சுவையும் என்னை சிலம்பின் மேல் நாட்டம் கொள்ளச் செய்தது. சிலப்பதிகாரத்தில் சமயத் தொடர்பான ஒன்றில் ஆய்வு செய்ய வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. ஆய்வு நிறைஞர், முனைவர், முதலிய பட்டங்களின் ஆய்வு ஏடுகள் பல கோணங்களில் ஆய்ந்தாலும் சிலம்பின் கண் இடம் பெற்றுள்ள விழாக் களைப் பற்றி இந்நாள் வரை ஆய்வு செய்யப் பெறாமை யால் 'சிலம்பின் விழாக்கள்' என்ற ஆய்வுத் தலைப் பினை ஆய்வு நிறைஞர் (எம்.ஃபில்) பட்டத்திற்கு மேற் கொள்ளக் காரணமாக அமைந்தது.

## ஆய்வின் நோக்கம்

இவ்வாய்வேடு இரண்டு நோக்கங்களைக் கொண்டு அமைகிறது. ஒன்று சமய வளர்ச்சிக்கு ஒரு படியேனும் உதவவேண்டும் என்பது, மற்றொன்று தமிழ்மொழி யின் முதற்காப்பியமான சிலப்பதிகாரம் இடம் பெற்ற

விழாக்களை உலகிற்கு எடுத்துக் காட்ட வேண்டு மென்பதும் ஆகும்.

## ஆய்வு மூலம்

இவ்வாய்வுக்கு மூலமாக அமைவது இளங்கோ வடிகள் இயற்றிய சிலப்பதிகாரம் என்னும் முத்தமிழ் முதற் காப்பியமாகும்.

## ஆய்வின் அமைப்பு

இவ்வாய்வேடு நான்கு இயல்களைத் தன்னுள் கொண்டுள்ளது. பின்னர் முடிவு உரையோடு பின்னிணைப்பையும் கொண்டுள்ளது. இறுதியில் துணை நூற் பட்டியல் இடம் பெற்றுள்ளது. இனி நான்கு இயல்களைக் குறித்தும் சிறு குறிப்புக்களாகக் காண்போம்.

*விழா-விளக்கம்* என்ற தலைப்பின் கீழ் முதல் இயல் ஆயப்பெற்றுள்ளது. இதில் விழா விளக்கம், விழாத் தோற்றம், விழாவின் நோக்கம், வகைபாடுகள், பயன்கள், விழாவோடு தொடர்புடைய பிறதுறைகள் குறித்து ஆயப்பெற்றுள்ளன.

இரண்டாவது இயல் *சங்க இலக்கியத்தில் விழாக்கள்* என்ற தலைப்பின் கீழ் ஆயப்பெற்றுள்ளது. சங்க இலக்கியங்களில் காணப்படும் சமய, சமுதாய விழாக்களைப் பற்றியும், அவ்விழாக்களை அக்கால மக்கள் எவ்வாறு கொண்டாடினர் என்பதைக் குறித்தும் இந்த இயலில் விளக்கப்பெற்றுள்ளது.

*சிலம்பில் சமய விழாக்கள்* என்ற இயலில் சிலப்பதி காரத்தில் காணப்படும் சமய விழாக்களான இந்திர விழா, காமன் விழா, கொற்றவை விழா, முருகன் விழா, திருமால் விழா மற்றும் அந்தி விழா, நீராட்டு விழா, ஆகிய விழாக்களைப் பற்றி இவ்வியலில் ஆயப் பெற்றுள்ளன.

சிலப்பதிகாரத்தில் கொற்றவை விழா, முருகன் விழா, திருமால் விழா, ஆகிய விழாக்களை மக்கள் பலர் ஒன்றுகூடி இன்பமாகக் கொண்டாடுகின்றனர். எனவே இவற்றை விழாவாகக் கொள்கிறேன். இதனை அரவணை செய்வதுப் போல் சென்னைப் பல்கலைக் கழக ஆங்கில அகராதியும், மதுரைப் பேரகராதியும் விழா என்றச் சொல்லுக்கு மகிழ்ச்சியில் திளைத்தல், கொண்டாடுதல், இசை நிகழ்ச்சிகள், முதலிய பொருள் கூறியுள்ளன. இந்த கருத்தின் அடிப்படையில் பார்க்கும் போது மேற்கண்ட மூன்றும் விழாவாகும்.

நான்காம் இயல் 'சிலம்பில் சமுதாய விழாக்கள்' என்ற இயலில் சேரன் செங்குட்டுவனின் பிறந்தநாள் விழா, மணிமேகலையின் பெயர் சூட்டு விழா, மாதவியின் அரங்கேற்று விழா, கோவலன்-கணணகி திருமண விழா கண்ணகி நாடுகல் விழா ஆகியனப் பற்றி முறையாக விளக்கப்பெற்றுள்ளது. இதன் பின்னர் முடிவுரை அமைகிறது. அதில் இவ்வாய்வின் முடிவுகளும், இது தொடர்பாக மேலும் ஆய்வு மேற்கொள்ளுவதற்குரிய கூறுகளும் வழிகளும் உரைக்கப் பெறுகின்றன. அடுத்து பின்னிணைப்பு இடம் பெறுகிறது. பின்னிணைப்பில் சிலப்பதிகாரம் குறித்து எம்.ஃபில்., பட்டம், பிஎச்.டி. பட்டம், எம்.லிட் பட்டம் பெற்றோர் பட்டியல் முறையே இடம் பெறுகின்றன. அதனை அடுத்து துணை நூல் பட்டியலில் ஆய்வுக்குப் பயன் பட்ட நூல்கள் அகர வரிசையில் கொடுக்கப்பட்டுள்ளன.

சங்க நூல்களில் அடிக்குறிப்பிடும் போது சுருக்க விளக்கத்தில் நூல் பெயர் கூறி அடுத்துப் பாடல் எண்ணையும் அதற்கடுத்து அடி வரையறையையும் குறிப்பிட்டுள்ளேன். சிலப்பதிகாரம் என்பது, சிலம்பு என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில் அடிக்குறிப்புகளில் கூறும்போது முதலில் காதை

எண்ணும் அடுத்து வரி அல்லது வரிகளும் குறிக்கப் பட்டுள்ளன. சில இடங்களில் காதை எண்ணை அடுத்துப் பாடல் எண் கொடுத்து, அடுத்து அடிகளின் எண் கூறப்பட்டுள்ளன. சுருக்கக் குறியீட்டில் ஒரு பக்கத்தைக் குறிக்க 'ப' என்றும், முதற் பதிப்பு என்பதை 'மு.ப.', என்றும் குறிக்கப்பட்டுள்ளன. மேற் கோள் பக்கத்திலே அடிக்குறிப்பு எண் கொடுக்கப்பட் டுள்ளது.

# இயல்-1

## விழா — விளக்கம்

மனிதன் முதன்முதலில் மலைக் குகைகளிலும் மரப் பொந்துகளிலும் வாழ்ந்தான். பின்னர் ஆற்றங்கரையில் குடியேறி சிறுசிறு குழுக்களாக வசிக்கத் தொடங்கி னான். தனக்கு ஊறு செய்வனவாக விளங்கிய இடி, மழை முதலியவற்றைக் கண்டு அஞ்சி அவற்றுக்கு விழா எடுப்பதின் மூலம் துன்பத்தினின்று விடுபடலாம் என எண்ணி அவற்றுக்கு விழா எடுத்தான். இவ்விழாக்கள் "சடங்குகளின் அடிப்படையில் தோன்றிச் சமுதாய நம்பிக்கையின் காரணமாகச் செல்வாக்குப் பெற்று வளர்ந்தும் வாழ்ந்தும் மறுமலர்ச்சியடைந்தும் மக்க ளினங்களிடையே தொன்றுதொட்டு நிலவிவரு கின்றன".[1] இவ்விழாக்கள் பிற்காலத்தில் சமய, சமுதாய விழாக்களாக வளர்ச்சியடைந்தன.

இன்றைய நாட்களில் மகிழ்ச்சியினை அடிப்படை யாகக் கொண்டவற்றை விழாக்கள் என்று அழைக் கின்றனர். மேலும் "மக்கள் திறளாகக் கூடிப்பழகவும் உயர்ந்தோரைப் போற்றவும் விழாக்களை உருவாக்கிக் கொண்டாடி வருகின்றனர்"[2]. இத்தகைய விழாவைப் பற்றி இங்கு விளக்கப் பெறுகின்றது.

### விழா — சொற்பொருள் விளக்கம்

விழாக்கள் உடலுக்கு ஓய்வும், உள்ளத்திற்கு இன்பமும் தரவல்லன. எனவே மக்கள் விரும்பி ஏற்றுக் கொண்டாடுவதால் 'விழா' என அழைக்கப்படு கிறது. 'விழா எனும் சொல் விழை என்ற சொல்லின் அடியாகத் தோன்றியது. இதற்கு விருப்பம், பற்று

ஆகிய பொருள்கள் உள; குறுகிய பற்று விரியும் போது "விழா" என்றும் கொண்டாட்டம் என்றும் விளங்கு கிறது" என்கிறார் மு. அருணாசலம்.

வடமொழியில் விழாவினை 'உற்சவ (விழா) என்பர். இதன் பொருள் உயர்வாகச் செல்" என்பதாகும்.

### விழா வேறுபெயர்கள்

சங்க இலக்கியங்களில் விழாவினை விழா' விழவு', சாறு', என்று அழைத்தனர். இன்று விழாவினைக் குறிக்க ஒவ்வொரு மாவட்டத்தினரும் ஒவ்வொரு விதமாகப் பெயரிட்டு அழைக்கின்றனர். காட்டாக "திருநெல்வேலி மாவட்டத்தினர் விழாக்களைக் 'கொடை" என்றும் செங்கை மாவட்டத்தினர் 'பண்டிகை" என்றும் அழைக்கின்றனர். பொதுவாகக் கற்றவர்கள் 'திருவிழா' என்று குறிப்பிடுகின்றனர்.

### திருவிழா

திருவிழா என்ற சொல்லைத் திரு+விழா எனப் பிரிக்கலாம். பழந்தமிழ் மக்கள் 'விழா' என்று அழைத்ததைப் பிற்கால மக்கள் விழா தெய்வத்திற்காகக் கொண்டாடப்படுவதால் தெய்வத்தின் புனித தன்மையும், சிறப்புகளையும் கருதி 'திரு' என்ற அடைமொழி சேர்த்துத் 'திருவிழா' என்று அழைத்தனர்.

### பண்டிகை

பண்டிகை என்பது வீட்டில் இருந்தவாறு கொண்டாடும் சமய விழாவினைக் குறிக்கும். காட்டாகத் தீபாவளிப் பண்டிகையைக் கூறலாம். திருவிழா பலர் ஒன்று சேர்ந்து எடுக்கப்பெறும் விழாவினைக் குறிக்கும். சான்றாக மாரியம்மன் திருவிழாவைக் கூறலாம். முன்னது வீட்டளவில் கொண்டாடப்படுவது; பின்னது மக்கள் ஒன்று திரண்டு சமுதாய அளவில் கொண்டாடுவது ஆகும்.

இதனால் அறிவது விழா, திருவிழா, கொடை, பண்டிகை முதலியன ஒரு பொருள் குறித்த பல சொல் ஆகும்.

## விழாவும் சடங்கும்.

"சடங்குகளே விழாக்களுக்கு அடிப்படை. சடங்குகளின் ஒன்றிணைக்கப்பட்ட கூட்டுத் தொகுதியினை விழா எனக் கூறலாம்".[9] சடங்கு என்பது மனித வாழ்க்கையில் நடக்கக்கூடிய நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டமைவது. இச்சடங்குகள் ஒரு குறிப்பிட்ட குழுவினருக்கும், இனத்தினர்க்கும் இன்பம் அளிக்கவல்லன. விழா என்பது மக்கள் விருப்பத்திற்கு ஏற்பவும், சூரியன், சந்திரன் முதலியவற்றின் இடப்பெயர்சிக்கு ஏற்பவும், சமயத்தொடர்புடையனவாகும். க. காந்தி என்பவர் விழாவும் சடங்கும் பற்றிக் கூறுகையில் "சடங்குகள் என்பன மனிதனோடும் இனக்குழுவோடும் தொடர்புடையன என்றும், விழாக்கள் மீவியற்கைக் கூறுகளோடும், சமுதாயத்தோடும் தொடர்புடையன என்றும், இன்றைய நாட்களில் இவ்வாறு சொற்களைப் பொதுவாகப் பயன்படுத்துகின்றனர்"[10] என்று கூறுவது மேற்கூறிய கருத்தை அரண்செய்வதாக அமைகிறது. நாளடைவில் சடங்குகள் விழாவாகியது என்பதை அறியலாம்.

## அகராதி, கலைக்களஞ்சியம், அறிஞர் கருத்து

விழா, விழவு, ஆகியன ஒரு பொருள் குறித்த இரு சொற்களாகும். விழாவைப் பற்றி அகராதிகள் பின் வருமாறு கூறுகின்றன. விழா என்பதற்கு, "திருவிழா, மங்கலச் சடங்கு" எனக் கழகத் தமிழ் அகராதியும்,[11] விழவு என்பதற்குத் "திருவிழா, விளையாட்டு, அவா" என மதுரைத் தமிழ்ப் பேரகராதியும்[12] பொருள் கூறுகின்றன. "ஃபெஸ்டிவல் (Festival) என்ற ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழில் விழா, விழாக் கொண்டாட்டம், மகிழ்ச்சியில் திளைத்தல், பருவகாலச் சிறப்பு, இசை

நிகழ்ச்சிகள்" என்று சென்னைப் பல்கலைக்கழக ஆங்கில அகராதி" பொருள் கூறுகிறது.

மேற்கூறிய சான்றுகளிலிருந்து 'விழா' என்றால் மகிழ்ச்சியைத் தரவல்ல ஒரு நிகழ்ச்சி என்று கருதலாம்.

"சந்திரனுடைய திதிகள், கிரகணங்கள், விஷீக்கள், அயனங்கள் போன்றவை பருவகால மாறுதல்களுடன் சேர்ந்தவை. அந்த காலங்களில் இனத்தவர் அனைவரையும் ஒருங்கு கூடச் செய்வன சடங்குகளும் விழாக்களுமாகும்"' எனத் தமிழ் கலைக்களஞ்சியமும் "விழாக்கள் கூட்டுப் பழக்க வழக்கங்களில் இருந்து பெறப்படுகிறது. பழங்காலத்தின் நடத்தையிலிருந்து, மாய மந்திரங்களை சார்ந்த ஒரு சமூகக்கூட்டம் சேர்ந்து இணைந்து பெறுகின்ற ஒரு நிலைதான் விழாவாகும்"' என ஆங்கில கலை களஞ்சியமும் கூறுகின்றது.

"இறைவனின் இருப்பிடமான உடலையும், நமது இருப்பிடமான இல்லத்தையும் சுத்தமாக வைத்துப் புத்தாடை அணிந்து அறுசுவை உணவருந்துவது பண்டிகை ஆகும் என்று எஸ். நடராஜன் (நஜன் என்ற அறிஞர் கூறுகிறார்".

## விழா — தோற்றம்

விழா முதன்முதலில் எப்போது தோன்றியது என்பதை வரையறுத்துக் கூறுவது கடினம். ஆதிகால மக்கள் மிருகங்களைக் கொன்று அதை உண்ணும் முன்பு ஒன்று கூடி மகிழ்ச்சியில் திளைத்தனர். அம் மகிழ்ச்சியோ, தனி நபருக்கோ, குழுவினருக்கோ தீங்கான நெருக்கடி உண்டாகும் காலத்தில் அதனை நீக்கிக்கொள்வதற்கோ, விழாக்கள் கொண்டாடி இருக்கலாம். மற்றும் தங்கள் உழைப்பின் பயனால் விளைந்த தானியங்களை அறுவடைசெய்து அம் மகிழ்ச்சியைக் கொண்டாடியிருக்கலாம். இவைகளே விழாவின் அடிப்படைத் தோற்றமாகும். இவ்வகை

யான விழாவிற்குக் காலப்போக்கில் சில சமயக் கொள்கைகளும், புராண ஆதாரங்களும் திணிக்கப் பட்டுச் சமய விழாக்களாகச் சிலவற்றை ஆக்கி விட்டனர். "விழாக்கள் நம்பிக்கையின் காரணமாக மனிதன் மீவியற்கைச் சக்திகளைத் தனக்குச் சாதக மாக்க முயன்ற நிலையில் தோன்றியனவாகவே காட்சி தருகின்றன"[17] இத்தகைய விழாக்களைப் பிற்காலத்தில் மக்கள் விருப்பத்திற்கு ஏற்பப் பல நிலைகளில் கொண்டாடி வருகின்றனர்.

## விழா — நோக்கம்

மக்கள் எச்செயலைச் செய்யினும் அதற்கு நோக்கம் ஒன்றுண்டு. அதேபோல் விழா கொண்டாடு வதற்கும் நோக்கம் உண்டு.

வாழ்க்கையில் உழன்று கொண்டிருக்கும் மக்க ளுக்கு விழிப்புக் குறைவதுண்டு; "விழிப்புக் குறைந்த வர்களிடையே விழிப்பை உண்டாக்கவல்ல ஆற்றல் படைத்த செயல்கள் சில உள. அவ்விதச் செயல்களுள் மிகச் சிறந்தது விழாக்களைக்கொண்டாடுதல் ஆகும்".[18] என்ற கருத்து இங்குக் குறிக்கப்பெறத் தக்கது.

விழாக்கள் கொண்டாடுவதால் பல இன, மொழி மக்கள் ஒன்றுகூடி நட்புடன் வாழ வகை செய்யும். மேலும், நாட்டின் பல்வேறு பகுதிகளில் நிகழும் செய்தி களையும், பல மக்களின் பழக்க வழக்கங்களையும் அறிந்துகொள்ள வாய்ப்பு ஏற்படுகிறது. "நாட்டில் பசியும் பிணியும் பகையும் நீக்குவதே விழாவின் குறிக் கோள்"[19] என்கிறார் அ.மு. பரமசிவானந்தம்.

மக்களின் நல்லுணர்ச்சிகளை எழுப்பிவிட்டு அவர் களைப் பலவித வேலைகளில் ஊக்கமுடன் ஈடுபடுமாறு செய்யும் ஆற்றல் மிக்கது விழாவாகும். மக்களுக்கு நல்லுணர்ச்சி, விழிப்பு மட்டுமின்றி அவர்கள் துன்பத் தில் இருக்கும் போது அதை மறந்து இன்பம் பெறுவர்.

இன்பத்தைப் பலருடன் பகிர்ந்து கொள்ளும் போது அவ்வின்பம் பன்மடங்காகப் பெருகுகின்றது. எனவே, விழாவின் நோக்கம் துன்பத்தைப் போக்கி இன்பத்தை அளிப்பது எனலாம்.

பக்தி உணர்வு, கடவுள் உணர்வு மக்களிடையே உண்டாக்கவும், சமயத்தை நிலைநிறுத்தவும், சமய விழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

இவ்வாறு, இன்பம், புத்துணர்ச்சி, விழிப்பு, ஒற்றுமை முதலியனவற்றை அளிப்பதே விழாவின் பொது நோக்கமாக இருக்கிறது. சில விழாக்களைக் கொண்டாடுவதற்குத் தனிப்பட்ட நோக்கங்கள் இருப்பதைக் காணலாம். காட்டாகப் பொங்கல் விழா உழவர் தங்கள் உழைப்பின் பயனாக விளைந்த புதிய தானியங்களைக் கொண்டு பொங்கலிட்டு அதை உழவுத் தொழிலுக்கு உதவிய சூரியனுக்கும், உழவுக் கருவிகளுக்கும், பசு, எருது போன்றவற்றிற்கும் நன்றி தெரிவிக்கும் வகையில் படைத்துக் கொண்டாடுகின்றனர்.

தீபாவளி, சிவராத்திரி முதலிய விழாக்கள் கடவுளின் சிறப்பைப் பற்றியன. கிருட்டிண ஜெயந்தி வினாயகர் சதுர்த்தி முதலிய விழாக்கள் கடவுளின் பிறப்பை நினைவு கூர்வதை நோக்கமாகக் கொண்டுள்ளது.

மேலை நாட்டவர் தம் உழைப்பின் பயனாக நிலத்தில் விளைந்தவைகளை அறுவடை செய்த பிறகு அம் மகிழ்ச்சியில் 'அறுவடை விழா' என்று மிகச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். இது போன்று உழைப்பின் பயனையும் கொண்டாடுகின்றனர்.

இவ்வாறு விழாக்கள் கொண்டாடுவதில் தனிப்பட்ட நோக்கமும், பொது நோக்கமும் இருப்பதை நாம் கண்கூடாகக் காணலாம்.

### விழா — கொண்டாட்டம்

விழா கொண்டாட்டங்கள் நாகரிக வளர்ச்சிக் கேற்பவும், மதத்திற்கு ஏற்றவாறும் மாறுபடுகின்றன. சான்றாக இந்துக்களின் விழா என்றால் அங்குப் பெரும் பாலும் கடவுள் உலா இருக்கும். கிறித்துவர், முகமதியர் தம் கோயில்களில் ஒன்று கூடி விழாவினைக் கொண்டாடுவர். விழாக்கள் பண்டைக் காலத்திலும் இன்றும் எவ்வாறு கொண்டாடினார்கள், கொண்டாடு கிறார்கள் என்பதை இனி ஆய்வோம்.

### கொடியேற்றல்

விழா நடைபெறப் போகிறது என்பதை முன் கூட்டியே மக்களுக்கு அறிவிப்பதற்காகவும் அவ்விழா நல்முறையில் நடைபெற வேண்டும் என காலையில் நல்ல நேரத்தைப் பார்த்து கொடியேற்றுவர். அக்கொடி, விழா முடியும் வரை இருக்கும். பண்டைக் காலத்தி லிருந்தே கொடியேற்றும் வழக்கம் இருந்தது என்பதை இன்றும் கோயில்களில் கொடிமரம் இருப்பதைக் கண்டுத் தெரியலாம்.

இக்காலத்திலும் இவ்வழக்கம் உண்டு. கொடி யேற்றுதல் பொதுவாக கோயில் விழாக்களிலே நடை பெறும்.

### விழா அறிவித்தல்

விழா அறிவித்தல் என்பது விழாவின் தொடக்கம் முதல் முடிவு வரை நிகழ்ச்சிகளை மக்களுக்கு விளக்கு தல் ஆகும். சங்க காலத்தில் விழாவினை மக்களுக்கு அறிவிப்பவனாகக் குயவன் இருந்தான் என்பதை நற்றிணைக் கூறுகிறது.[20]

இன்றைய நாட்களில் செய்திதாள்கள், சுவ ரொட்டிகள், ஒலிபெருக்கி, வானொலி முதலியவற்றின் வழியாக விழா நடைபெறுவதை மக்களுக்கு முன்

கூட்டியே தெரிவிக்கின்றனர். கிராமப் புரங்களில் பறை சாற்றி அறிவிப்பதை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

### விழா நாள்

விழா, நன்மை வேண்டி கொண்டாடப்படுவதால் "மக்கள் நல்ல நாளில், நல்ல கோள்களில் சேர்க்கை கூடிவரும் நேரத்தில் விழாக்களைத் தொடங்குகின்றனர்."[11] விழாக்கள் பொதுவாக வளர்பிறை நாட்களிலேயே துவங்கும். மார்கழி நீராட்டு விழா பௌர்ணமியில் தொடங்கியதைத் திருப்பாவை மூலம் அறியலாம்.[12] இன்றைய நாட்களிலும் பல விழாக்கள் வளர்பிறைகளிலும், சில விழாக்கள் முழுமதியிலும் நிகழ்வதைக் காணலாம்.

விழா நாட்களில் இறைவனுக்குச் சிறப்பான வழிபாடு நடைபெறுவதால், இசை நிகழ்ச்சிகள் தொடர்ந்து நடைபெறும். மேலும் விழா நாட்களை மக்கள் இன்பமாக கழிக்கவும் மனதிற்கு இன்பம் அளிக்கவும், இசை நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள், பலவகையான கூத்துக்கள், நாடகங்கள் நடைபெறும். இத்துடன் வாண வேடிக்கையும் இடம் பெறும்.

### உணவு வகை

விழா நாட்களில் மக்கள் இன்புற்று இருப்பர். அதற்கு ஏற்ப அவர்களுடைய உணவும் சிறப்பான முறையில் அமையும். விழாவிற்கு ஏற்ப மரக்கறி உணவு, ஊன் உணவு, திண்பண்டங்கள் ஆகியவற்றை உண்டு தம் சுற்றத்துடன் மகிழ்ந்து இருப்பர்.

### அலங்கரித்தல்

விழா நாட்களில் மக்கள் தங்களைப் பலவிதமாக அழகுபடுத்திக் கொள்வர். இவ்வழக்கம் சங்ககாலம் முதல் இருந்து வருகிறது. என்பதைப் பின்வரும் சான்றுகள் மூலம் அறியலாம்.

"அரிமல ராம்பலொ டார்தழை தைஇ
விழவாடு மகளிரொடு தழூ உவணிப் பொலிந்து"[23]

என்றும்

"நெடுங்கொடி நுடங்கு மட்ட வாயில்
இருகதிர்க் கழனிப் பெருங்கலி னன்ன
நலம் பாராட்டி நடையெழிற் பொலிந்த
விழவிற் செலீஇயர் வேண்டும்"[24]

என்று வரும் பாடலடிகள் மூலமும் அறியலாம்.

விழாவிற்குச் சென்ற மகளிர் தழையுடையை அணிந்தும் சென்றனர் என்பதை நற்றிணைக் கூறு கிறது.[25] இன்றைய நாட்களிலும் மாரியம்மன் திருவிழா வில் வேம்புத் தழை உடையாக அணிந்து செல்வதைக் கிராமப்புரங்களில் பார்க்கலாம். இது இன்று வேண்டுத லாக மாறிவிட்டது.

இன்றைய மக்கள் விழா நாட்களில் புத்தாடைகள் உடுத்தி, பொன் ஆபரணங்கள் அணிந்து, பல வாசனைப் பொருட்களைத் தெளித்துத் தங்களை அழகு படுத்திக் கொள்வர். இவ்வாறு ஒப்பனைச் செய்து கொள்ளக் காரணம் தம் மகிழ்ச்சியை வெளிப் படுத்தவே ஆகும். இது போன்று அழகு செய்துக் கொள்ளும் மக்கள் தங்கள் வீடுகளையும் விழாவிற்கு இரண்டு, மூன்று நாட்களுக்கு முன்பிருந்தே சுத்தம் செய்து, சுண்ணாம்பு, பல வண்ணங்கள் அடித்து அழகுச் செய்வர்.

## விழா — வகைப்பாடுகள்

பண்டைக் கால விழாக்கள் கடவுள் தொடர்புடை யனவாக இருந்தன. எனினும் உள்ளி விழா, பிறந்த நாள் விழா முதலிய விழாக்கள் சமுதாயத்தைச் சார்ந் தனவாக இருந்தன. இன்றைய நாட்களில் கடவுள் விழாக்களைக் காட்டினும் சமுதாய விழாக்களே மிகுதி யாக உள்ளன. சமுதாயத்தின் எண்ணப் போக்கிற்கு ஏற்றவாறு விழாக்கள் உருவாகியும், சில மறைந்தும்

வருவதைக் காணலாம். சமூக விழாக்கள் நகரங்களில் மிகுதியாக நடைபெறுகின்றன. சமய விழாக்கள் நகரங்களைவிட கிராமங்களிலே மிகுதியாக கொண்டாடப்படு கின்றன. சான்றாக மாரியம்மன் விழா, திரௌபதி விழா முதலியனவற்றைக் கூறலாம்.

நாட்டில் விழாக்கள் பெருகி விட்டதால் அவற்றை வகைபடுத்திப் பிரித்தால்தான் இனம் கண்டுகொள்ள இயலும். அதன்படி விழாக்களை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம். அவை சமய விழாக்கள், சமுதாய விழாக்கள், தேசிய விழாக்கள், இலக்கிய விழாக்கள் என்பனவாகும். இனி இவற்றை ஆயலாம்.

## சமய விழாக்கள்

"சமையம் என்னும் சொல்லே சமயம் என்றாயிற்று என்பர் மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள். சமைத்தல் என்னும் பகுதிக்குப் பக்குவப் படுத்து என்பது பொருள். இறை நெறியில் நின்று இறையருளைப் பெற்று, இறையடி சேர்த்தலாகிய முக்திப் பேற்றுக்கு நம்மைப் பக்குவமடையச் செய்வதே சமயம் என்பதன் பொருளாகும்."[16] இச்சமயத் தெய்வங்களின் அருள் பெறவும், சமயத்தை நிலை நிறுத்தவும் பல சமய விழாக்களைக் கொண்டாடு கின்றனர்.

சமய விழாக்கள் இதிகாசம், புராணங்கள் அடிப் படையிலும், விண்வெளி கோள்களின் இடப்பெயர்ச் சிக்கு ஏற்பவும், மதத்தினைச் சார்ந்த புனித மாந்தர் களின் பிறந்த, சிறந்த நாளை விழாக்களாக கொண் டாடுகின்றனர். சமய விழாக்களை இந்து விழா, கிறித்துவ விழா, முகமதிய விழா என்று மூன்று வகை யாகப் பிரிக்கலாம். இனி அவற்றைப் பற்றிக் காணலாம்.

## இந்துமத விழாக்கள்

இந்துக்கள் கொண்டாடும் விழாக்களைப் பற்றி ஆய்வோம்.

### பொங்கல் விழா

தமிழர்களின் திருநாள், உழவர்களின் பெருநாள் என்று கொண்டாடப்படும் தனிச் சிறப்புடைய விழாவே பொங்கல் விழாவாகும். "நாட்டிற்கு அச்சாணியாக விளங்கும் உழவர் பெருமக்களின் உழைப்பைப் போற்றுவதே இதன் கொள்கையாகும்."[21] இப்பொங்கல் விழா நன்றி கூறும் விழாவாகும்.

பொங்கல் விழா நான்கு நாட்கள் கொண்டாடப் பெறும். உழவுத் தொழிலுக்கு உயிர் மழை; ஆகவே மழைக்கு முதலில் விழா எடுக்கிறார்கள். மழைக்குத் தலைவன் இந்திரன். இந்திரனுக்குப் போகி என்ற பெயர் உண்டு. எனவேதான் இதனைப் போகிப் பண்டிகை என்று கூறுவர். அன்று பழைய, பயனற்றுப் போன பொருட்களைத் தீயிலிட்டுக் கொளுத்துவர். மறுநாள் உழவர்களின் உழைப்பால் விளைந்த புதிய அரிசியினைக் கொண்டு பொங்கலிட்டுச் சூரியனுக்குப் படைப்பர். மூன்றாம் நாள், மாடுகளுக்கு நன்றி கூறும் விழா நாள். அன்று மாடுகளைக் குளிப்பாட்டி அவற்றுக்கு வண்ணங்கள் தீட்டிப் பொங்கல் இட்டுப் படைப்பர். இறுதி நாள் காணும் பொங்கல் நாளாகும். அன்று உறவினர்களைச் சென்று காணும் நாளாகையால் இதனை 'காணும் பொங்கல்' என்றும் அதுவே திரிந்து கனுப் பொங்கல் என்று அழைக்கின்றனர். அல்லது மாடுகளுக்கு மாட்டுப் பொங்கல் போன்று, கன்றுகளுக்காக ஏற்பட்ட கன்றுப் பொங்கலே கனுப் பொங்கலாயிற்று என்று கருத ஓர் இடம் உண்டு.

பொங்கலை 'மகர சங்கராந்தி' என்றும் 'சங்கராந்தி' என்றும் அழைப்பர். சங்கராந்தி எனும் சொல்லுக்குச்

சேருதல் என்று பொருள். தன ராசியை விட்டு மகர ராசிக்குச் சூரியன் வந்து சேருவதால் 'மகர சங்கராந்தி' என்று அழைக்கப்படும்.

## மகா சிவராத்திரி விழா

சிவராத்திரி விழா மாசிமாதத்து அமாவாசையன்று கொண்டாடப்படும். அன்று இரவு சிவபெருமான் ஒளி வடிவாக லிங்கத்தில் புகுந்தார் எனச் சைவர்கள் கருதுவர். ஆகையால் இதனைச் சிறப்பாகக் கொண் டாடுகின்றார்கள். அந்நாளில் தேவர்களும், அரசர் களும் பாற்கடலைக் கடைந்த போது எழுந்த நஞ்சினை சிவபெருமான் உண்டு தேவர்களைக் காத்த தாகக் கூறுவர்.

சிவராத்திரியன்று மக்கள் நோன்பிருந்து இரவெல் லாம் கண்விழித்து சிவனை நினைத்துப் பாடிப் பரவுவர். அன்றைய இரவுப் பொழுதை ஒவ்வொரு பகுதியும் மூன்று மணி நேரம் கொண்ட நான்கு காலப் பகுதியாகப் பகுத்து, ஒவ்வொரு பகுப்புக் காலத்திலும் நீராடிய பிறகு முதல் காலத்தில் பால், இரண்டாவது காலத்தில் தயிர், மூன்றாவது காலத்தில் வெண்ணெய், கடைசி காலத்தில் தேன் ஆகியவற்றால் சிவனை வழி பாடு செய்து தமது விரதத்தை முடித்துக் கொள்வர்.

சமண மதத்தைத் தோற்றுவித்த 'விருஷப தேவர்' நாட்டு மக்களுக்கு ஒருநாள் இரவு சமணத்தத்துவங் களைக் கூறிக் கொண்டிருந்தார். நள்ளிரவு ஆகிய வுடன் மக்கள் உறங்கிவிட்டனர். மக்கள் உறங்கி விழித்த போது விருஷபதேவர் நிர்வாணம் அடைந் திருந்தார். அதனால் இந்நாளையே சமணர்களும் புனித நாளாகக் கொண்டாடுகின்றனர்.[11]

## கிருட்டிண ஜெயந்தி விழா

திருமால் கிருட்டிணனாகப் பூமியில் பிறந்த நாளை கொண்டாடுவது 'கிருட்டிண ஜெயந்தி விழா' ஆகும்.

ஜெயந்தி என்ற வடமொழி சொல்லிற்குப் பிறந்த நாள் என்று பொருளாகும். கிருட்டிண ஜெயந்தியை 'ஜென் மாஷ்டமி', 'ஸ்ரீ ஜெயந்தி', 'கோகுலாஷ்டமி' என்றும் அழைப்பர். வீடுகளில் சிறு குழந்தையான கிருட்டிணன் பாதம் போன்று வாசற்படியிலிருந்து பூசை அறைவரை கோலம் போட்டுக் கொண்டாடுவர். கிருட்டிணன் உரியில் வெண்ணெய்த் திருடி உண்டதை நினை வூட்டும் வண்ணம் அன்று கிருட்டிணன் கோயில் களில் உரி அடித்துச் சிறப்பாக வைணவர் கொண் டாடுவர்.

## தைப்பூச விழா

தைப்பூச விழா, தைமாதப் பௌர்ணமியன்று நடைபெறும். அன்றைய தினம் திருவிடை மருதூரில் இருக்கும் மகாலிங்கத்திற்கு விழா நடைபெறும். மேலும் முருகனது ஆறுபடை வீடுகளிலும் விழா நடைபெறும். அன்று காவடிகள் எடுத்துக் கொண்டும் பஜனை செய்து கொண்டும் பக்தர் கோயில்களுக்கு நடந்து வந்து வழிபடுவர்.

## வைகுண்ட ஏகாதசி விழா

வைணவர்களுக்குரிய இவ்விழா மார்கழி மாதம் பதினொன்றாம் நாள் கொண்டாடப்படுகிறது. அன்று முழுவதும் விரதம் இருந்து இரவில் கண்விழித்து மறு நாள் காலையில் வழிபாடு செய்து விரதத்தை முடிப்பர். இவ்வாறு விரதம் செய்வோர் வைகுண்டம் செல்வர் என்பது வைணவர் நம்பிக்கையாகும். மார்கழி மாதம் பனிரண்டாம் நாள் வானுலக வாசல் திறக்கப்படும்; அன்று திருமாலை வழிப்பட்டால் விண்ணுலகம் செல்லலாம் என்று சமய சான்றோர்கள் கூறுவர். வைணவக் கோயில்களில் இந்நாளில் ஆண்டு முழு வதும் அடைத்திருந்த வைகுண்ட வாசலை அன்று திறந்து விடுவர். அன்றைய நாளில் திருவரங்கத்தில்

இவ்விழாவினை மிகச் சிறப்பாகக் கொண்டாடுவார்கள்.

### கார்த்திகை தீப விழா

கார்த்திகை மாதத்தில் வீட்டின் முற்றத்தில் தீபங்களை ஏற்றுவதால் இதனைக் கார்த்திகை தீபம் என்று அழைப்பர். இவ்விழா பழமையான விழா என்பதைத் தேவாரத்தில்

"தொல் கார்த்திகை"[11]

என்று கூறுவதிலிருந்து அறியலாம். கார்த்திகை தீப விழாவிற்குச் சிறப்பு வாய்ந்த இடம் திருவண்ணாமலையாகும். அவ்விடத்தில் சிவபெருமான் ஒளியாகக் காட்சி தருகிறான் என்பது நம்பிக்கை. ஆகவே திருவண்ணாமலையில் இவ்விழாச் சிறப்பாக நடைபெறுகிறது.

இந்நாளில் சிவபிரான் திரிபுர அசுரரை எரித்த விழா கோயில்களில் நடத்தப்படுகிறது.

### கந்த சஷ்டி

சஷ்டி, மாதம் இருமுறை வரினும், ஐப்பசி மாதம் வரும் சஷ்டி சிறந்து விளங்குகிறது. அதற்குக் காரணம் அன்று முருகன் அசுரர்களிடம் போர்புரிந்து வெற்றி பெற்று உலகில் அமைதியைக் காத்தார். இதன் நினைவாகவே இந்நாளைக் கொண்டாடுவர். இவ்விழா ஏழு நாட்கள் நடைபெறும். அந்நாட்களில் கந்தபுராணச் சொற்பொழிவு நடைபெறும். இறுதி நாள் சூர சம்ஹாரம் நடைபெறும். இறுதி நாள் முருகனுக்குத் திருமணம் நிகழ்த்திக் கொண்டாடுவர்.

### தீபாவளி

இந்தியாவில் உள்ள இந்துக்கள் அனைவரும் தீபாவளியைச் சிறப்பாகக் கொண்டாடுவர்.

"ஐப்பசி மாத அமாவாசைக்கு முன்வரும் திரயோ தசி, சதுர்த்தசி, அமாவாசை, அதனடுத்த கார்த்திக சுக்கிலப் பிரதமை, இந்த நான்கு நாட்களும் தீபாவளி சம்பந்தப்பட்ட நாட்களாகும். தீபாவளி என்ற சொல் லுக்குத் தீபங்களின் ஆவளி அல்லது வரிசை என்பது பொருள்".[10]

கிருஷ்ணன் நரகாசுரனைக் கொன்று உலகில் அமைதியைக் காத்தார். இம்மகிழ்ச்சியில் மக்கள் விளக்கு ஏற்றி வெடிகளை வெடித்து கொண்டாடு கின்றனர். தீபம் ஏற்றி அதில் இலக்குமியைத் தியானிக்க வேண்டும். எண்ணெய், வெற்றிலை, பாக்கு, பழம், திண்பண்டங்கள் இவற்றை இலக்குமிக்கு நிவேதனம் செய்து வழிபட வேண்டும். தீபாவளி அன்று தலையில் எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டும். அந்த எண்ணெயில் இலக்குமி வசிப்ப தாகவும், அன்று நீராடும் வெந்நீரில் கங்கை வசிப்பதாக வும் ஆன்றோர் கூறுவர். அன்று விடியற் காலையில் எண்ணெய்த் தேய்த்து நீராடுவோர் கங்கையில் நீராடிய பயன் அடைவர்.

## விநாயகர் சதுர்த்தி விழா

விநாயகர் என்பதற்கு எல்லா தெய்வங்களையும் விட உயர்ந்தவன் என்று பொருள். விநாயகர் சதுர்த்தி விழா ஆவணி மாதம், பௌர்ணமி கழித்து நான்காம் நாள் கொண்டாடுவர். இந்நாள் விநாயகர் பிறந்த நாளாகும். இவ்விழாவினைச் சைவர், வைணவர், முதலியோர் கொண்டாடுவர். அன்று விநாயகர் சிலை மண்ணால் செய்து விநாயகருக்குப் பிடித்த சுண்டல், கொழுக்கட்டை, பல திண்பண்டங்கள், பழவகைகளும் படைத்து விழாவைக் கொண்டாடுவர்.

இவ்விழா வீட்டளவில் கொண்டாடும் ஒரு விழா வாகும். இருப்பினும் பம்பாய் முதலிய நகரங்களில் நகர மக்கள் சேர்ந்து சிறப்பாகக் கொண்டாடுகின்றனர்.

கடைசியில் வினாயகர் சிலையை கிணற்றிலோ, ஆற்றிலோ, கடலிலோ கலப்பர்.

### நவராத்திரி விழா

'நவராத்திரி' என்பதை நவ+ராத்திரி எனப் பிரிக்கலாம். 'நவ' என்பதற்கு ஒன்பது என்றும், ராத்திரி என்பதற்கு இரவு என்றும் பொருள். ஒன்பது இரவுகள் பூசை செய்து மக்கள் கொண்டாடுவர். இவ்வாறு செய்யச் சக்தியற்றவர் சப்தமி, அஷ்டமி, நவமி, என்ற மூன்று நாட்களிலும் பூசிப்பது நல்லது. நவராத்திரி சுக்கில பட்சப்பிரதமையில் தொடங்கித் தசமியில் முடியும். வடநாட்டார் பத்தாம் நாளையும் கணக்கிட்டு தசராவெனக் கொண்டாடுவர். நவராத்திரியில் பொம்மைகளைக் கொலுவைப்பர். அன்றைய நாளில் மக்கள் தங்கள் வாழ்க்கைக்கு உதவிப்புரியும் பல ஆயுதங்களுக்கு நன்றி செலுத்தும் வண்ணம் அவற்றிற்கு உயிர்பலியோ, பூசணிக்காயோ பலி கொடுத்து, 'ஆயுத பூசை' என்று கொண்டாடுவர்.

"நவராத்திரி விழா, விசய நகரப் பேரரசர்களாலும், அவர்களுடைய சிற்றரசர்களாக இருந்த மதுரை நாயக்க மன்னர்களாலும் தமிழ் நாட்டில் பரப்பப்பட்டது"[1] என்பர்.

நவராத்திரி விழா, மைசூரில் மலைமேல் எழுந்தருளியிருக்கும் சாமுண்டீச்வரிக்குச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். இதே போன்று கல்கத்தாவில் உள்ள காளிக்கும் அந்த ஒன்பது நாட்கள் சிறப்பாக விழா நடைபெறுகிறது.

### சித்திரை விழா

சித்திரை மாதத்தில் சித்திரை நட்சத்திரத்தோடு சந்திரன் கூடும் நாளே 'சித்தரா பௌர்ணமி' ஆகும். இவ்விழாவை மக்கள் வீட்டிலே கொண்டாடாமல் ஆற்றங்கரை, கடற்கரை, சோலை முதலிய பரந்த

வெளியில் கொண்டாடுகின்றனர். அன்றைய தினம் கோயில்களில் உள்ள தெய்வங்களை ஆற்றங்கரையின் பரந்த மணல் வெளிக்கும், குளக்கரையில் உள்ள சோலைக்கும் கொண்டு வந்து வழிப்படுவர். அப் போது மக்கள் பல தின்பண்டங்களை தம் சுற்றத்தோடு உண்டு மகிழ்வர். இவ்விழாவைப் பண்டைக் காலத்தில் இந்திர விழாவாக கொண்டாடியமை சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவற்றின் மூலம் அறியலாம்.

## தேர்த் திரு விழா

கடவுளின் உற்சவ விக்கிரகத்தைத் தேரில் வைத்து ஊர்வலமாக இழுத்து வருவர். இதனையே 'தேர்த் திரு விழா' என்பர். மக்கள் கடவுளைத் தேடி கோயிலுக்குச் சென்ற போதும், கடவுள் மக்களைத் தேடி வந்த மைக்குத் தேர்த்திருவிழா சான்றாகும். தேர்த்திருவிழா வுக்கு சுற்றுப்புறத்திலுள்ள ஊர்களிலிருந்து மக்கள் திரண்டு வருவர். அவ்விடத்தில் பல மக்கள் கண்டும், அவர்களுடன் பழகியும் கொண்டாடுவதால் உள் ளத்துத் துன்பம் நீங்கி இன்பமடைவர்.

தேர்த் திருவிழாவின் மூலம் சில பயன்களும் உண்டு. வயது முதிர்ந்தோர், உடல் ஊனமுற்றோர், நோயாளிகள் முதலியோர் கோயிலுக்கு சென்று கடவுளை வணங்க முடியாத போது, தேர்விழாவின் மூலமாக கடவுளைக் கண்டு, வணங்க ஓர் அரிய வாய்ப்பு ஏற்படும்.

## கும்பாபிசேக விழா

கும்பாபிசேகம் என்பது, புதியதாகக் கோயிலைக் கட்டிய அல்லது பழைய கோயிலைப் புதுப்பித்தப் பிறகு கொண்டாடப்படும் திறப்பு விழாவினைக் குறிக்கும். இதனைக் 'குட நீராட்டு விழா' என்றும் அழைப்பர்.

இவ்விழாவிற்குப் புனிதமான ஆறுகளிலிருந்து குடங்களில் நீர்கொண்டு வந்து யாகசாலைகள்

அமைத்துத் தீ வளர்த்து மந்திரங்களை ஓதி அப் புண்ணிய நன்னீரைக் கோபுரங்கள் மீது ஊற்றி விழா கொண்டாடுவர்.

### தீ மிதித்தல்

தீ மிதித்தல், திரௌபதி அம்மன், மாரியம்மன் முதலிய சிறுதெய்வங்களுக்காகக் கொண்டாடும் ஒரு விழாவாகும். இவ்விழா தமிழகம் முழுவதும் கோயில் களில் கொண்டாடப்படுகிறது. ஏழை, பணக்காரன், சாதி வேறுபாடு இன்றி அனைவரும் தங்களுடைய வேண்டுதலுக்காகத் தீ மிதிப்பர். அப்போது கையில் காப்பு கட்டிக் கொண்டு தூய மஞ்சள் ஆடை உடுத்தி விரதம் இருந்து, கோயில் விழாவின் கடைசி நாள் தீ மிதித்துக் கொண்டாடுவர். இவ்வாறு தீ மிதித்தலால் தங்களுடைய பாவங்கள் போகும் என நம்புகின்றனர்.

கடவுள் இல்லை என்று கூறுபவரும் தீ மிதித்தலைப் பார்த்து தம் கருத்தை மாற்றிக் கொள்கின்றனர். தீ மிதிக்கும் பக்தர் பாதங்களுக்கு ஒன்றும் நேராமல் நல்ல முறையில் இருப்பதால் கடவுள் சக்தியை ஒப்புக் கொள்கின்றனர்.

தீ மிதித்தல் விழாவை இந்துக்களும், முகமதியர் களும் கொண்டாடுகின்றனர்.

### கிறித்துவ விழாக்கள்

உலகத்திலுள்ள முக்கிய மதங்களில் ஒன்று. ஏறக் குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு தோன்றிய மதம். இம்மதத்தை தோற்றுவித்தவர் இயேசு கிறிஸ்து என்பவர் ஆகும். இம்மதத்தினர் கொண்டாடும் விழாக் களைப் பற்றி ஆயலாம்.

### கிறிஸ்துமஸ் விழா

கிறிஸ்மஸ் இயேசுகிறிஸ்த்துப் பிறந்த டிசம்பர் 25-ம் நாளில் கிறிஸ்தவர்கள் கொண்டாடும் விழாவாகும்.

"கிறிஸ்துமஸ் என்பது கிறிஸ்து (Christ) ஆராதனை (Mass) என்ற இரண்டு சொற்களைக் கொண்டதாகும். ... கிறிஸ்து பிறந்த நாள் விழா எப்போது உண்டாயிற்று என்று தெரியவில்லை. பொதுவாக கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே தோன்றியது என்று கருதப்படு கிறது. தொடக்கத்தில் இவ்விழா சில இடங்களில் ஜனவரி ஆறு, மார்ச் 25, டிசம்பர் 25, எனப் பல நாட்களில் கொண்டாடப்பட்டது. 354-ல் ரோம் நகரத்துப் பாதிரியார் லைபிரியஸ், டிசம்பர் 25-ம் தேதி யிலேயே கொண்டாட வேண்டும் என்று உத்தர விட்டார். அதை ஒட்டியே இப்போது கொண்டாடி வருகின்றனர்."[11]

டிசம்பர் இருபத்துநான்காம் நாள் இரவு சபையில் ஒன்று கூடுவர். நள்ளிரவு பன்னிரண்டு மணி முடிந்ததும் ஆராதனைச் செய்து இயேசுவை வழிப்படுவர். பிறகு காலையில் அனைவரும் ஒன்றுகூடி மறுபடியும் ஆரா தனை செய்து விழா கொண்டாடுவர். மறுநாள் 'பரிசு நாள் விழா' எனக் கொண்டாடுவர். அன்றைய தினம் பல விளையாட்டுப் போட்டிகள் நடத்தி வெற்றிப் பெற்றவருக்கு பரிசு வழங்கிக் கொண்டாடுவர்.

### புனித வெள்ளிக் கிழமை

புனித வெள்ளிக் கிழமை என்பதை ஆங்கிலத்தில் குட் ஃபிரைடே (Good Friday) என்பர். இந்நாளில் தான், மக்களின் பாவங்களைப் போக்குவதற்குப் பாடு பட்ட இயேசுபெருமானை சிலுவையில் அறைந்துக் கொன்றனர். இயேசு மக்களுக்காக இரத்தம் சிந்தி இறந்தமையால் இந்நாளைப் புனித வெள்ளிக்கிழமை என்றுக் கொண்டாடுவர்.

### ஈஸ்டர் விழா

இயேசுவைக் கொன்று அடைக்கலம் செய்த மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்த நாளை 'ஈஸ்டர்

விழா' எனக் கொண்டாடுவர். இவ்விழா மார்ச்சு மாதம் இருபத்தியோராம் நாளிலும், அதன் பிறகு நிறைமதிக்கு அடுத்து வரும் முதல் ஞாயிற்றுக்கிழமை அன்றும் கொண்டாடப்படும்.

"ஈஸ்டர் என்பது இளவேனில் என்று பொருள் படும் ஆங்கிலோ சாக்சன் தேவதையின் பெயராம்".[11] ஈஸ்டர் அன்று குறுத்தோலை எடுத்துக் கொண்டு ஊர்வலமாக வருவார்கள்.

அறுப்பின் விழா என்பது அறுவடை விழாவாகும். கிறித்துவ உழவர்கள் தங்கள் உழைப்பினால் விளைந்த தானியங்களில் பத்தில் ஒரு பங்கைக் கடவுளுக்குக் கொடுத்து இவ்விழாவைக் கொண்டாடுவர். அறுப்பின் விழா பொதுவாக அறுவடைக்குப் பிறகே நடைபெறும்.

### வேளாங்கன்னி விழா

மேரியன்னைக்கு வேளாங்கன்னியில் ஆகஸ்டு இருபத்தெட்டாம் நாள் முதல் செப்டம்பர் பத்தாம்நாள் வரை மிகச் சிறப்பாக விழா நடைபெறுகிறது. இவ்விழா விற்குப் பல ஊர்களிலிருந்து மக்கள் வந்து கொண் டாடுவர்.

### முகமதிய விழாக்கள்

முகமதியர் கொண்டாடும் விழாக்கள் குறித்து இங்கு விளக்கப் பெறுகிறது.

### முகரம் விழா

முகமதியர் ஆண்டில் முகரம் மாதம் புண்ணிய மாதமாகும். இம்மாதத்தில் கொண்டாடும் விழாவே முகரம் ஆகும்.

"நபிமுகம்மது அவர்களின் பேரனும், நான்காவது பாலிஃப் ஹசரத் அலி அவர்களின் மகனுமான ஹசரத்-ஹீசயின், அவருடைய உறவினரோடும், மோ ஆவியா

வின் மகன் ஏசித் என்பவரின் பெரும் படைக்கு எதிராக கர்பலா பெருநிலத்தில் போரிட்டுத் தம் புனித உயிரிழந்தார்."[14] அந்நாளிலிருந்து அவர்களின் இறந் ததை நினைவூட்டும் வகையில் முகரம் விழா கொண் டாடப்பெறுகிறது.

## ரம்சான் விழா

முகமதியர் மாதக் கணக்குப்படி ரம்சான் திங்களில் வரும் இவ்விழாவுக்கு அம்மாதப் பெயரைக் கொண்டு ரம்சான் விழா என்று அழைப்பர்.

"ரம்சான் திங்களில் குர்ஆனின் ஒரு பகுதி முகம்மது நபிக்குக் கடவுளின் தூதராகிய ஜிப்ரேல் என்பவரால் தெரிவிக்கப்பட்டது. இந்தச் சம்பவம் நடந்த இரண்டாம் ஆண்டிலிருந்தே இதனைக் கொண்டாடு கின்றனர்."[15]

## பக்ரீத்

"ஈத்-உல்-அஸா என்ற நோன்புக்கு இந்தியாவில் பக்ரீத் என அழைப்பர். பக்ரீத் விழா இஸ்லாமிய மாதங்களின்படி ஸுலஸ் ஹிஜ்ஜார் மாதம் பத்தாம் நாள் கொண்டாடுவர். இம்மாதத்தின்படிப் பக்ரீத் என்பதற்கு 'விருந்து நாள்' என்று பெயர்"[16].

இதுபோன்று முகமதியர் சில விழாக்களைக் கொண்டாடுகின்றனர்.

## சமுதாய விழாக்கள்

பலர் ஒன்று கூடி வாழ்வது சமுதாயம் ஆகும். சமூக மக்கள் தங்கள் உள்ளத்திற்கு எது மகிழ்ச்சி தருகிறதோ அதை விழாவாகக் கொண்டாட விரும்பு கின்றனர். அதனால்தான் இன்றைய நாட்களில் விழாக்கள் மிகுதியாகக் கொண்டாடப் பெறுகிறது. இச்சமுதாய விழாக்கள் ஊரிலுள்ள அனைவருக்கும்

4

இன்பம் தராது ஒரு குறிப்பிட்ட குழுவிற்கோ, இனத் தவர்க்கோதான் இன்பம் தரும். காட்டாக அரசியல் தலைவருக்குப் பாராட்டு விழா என்றால் அந்தக் குழு வினர்க்குத்தான் இன்பம் அளிக்கிறது. அதேபோல் காதணி விழா, திருமண விழா என்றால் ஒரு குறிப்பிட்டவர்கள்தான் கொண்டாடுவர். இத்தகைய சமுதாய விழாக்கள் பல உள்ளன. அவற்றுள் முக்கிய மான சில விழாக்கள் பின்வருமாறு.

## பிறந்த நாள் விழா

ஒருவரது பிறந்த நாளை ஒவ்வொரு ஆண்டும் நினைவு கூர்வதே இதன் நோக்கமாகும். இவ்விழாவை அதிகமாகச் செல்வந்தர்கள் கொண்டாடுகின்றனர். பிறந்த நாள் விழா தொல்காப்பியர் காலத்தில் இருந்து வருகிறது.[17]

பிறந்த நாளன்று கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபடுவதும், நண்பர்களுக்கும் உறவினர் களுக்கும் இனிப்புகள் வழங்குவதும் மரபு. ஒரு சிலர் தானம் செய்து கொண்டாடுவர். இவ்விழா இன்றைய காலத்தில் சிறப்பான விழாவாகிவிட்டது.

## காதணி விழா

குழந்தை பிறந்ததிலிருந்து தலைமுடி அப்படியே இருக்கும். அம்முடியைச் சில மாதங்கள் அல்லது ஓரிரு ஆண்டுகள் கழித்துத் தங்களுடைய குல தெய்வத்திற் குப் பொங்கலிட்டுக் காது குத்தி நீக்குவர். இதைக் 'காதணி விழா' என்பர். சில இடங்களில் உயிர்பலி தருவதுமுண்டு. காதுகுத்துவது பற்றி நாட்டுப்புறங் களில் "அழகான குழந்தைகளைக் கண்டு எமன் ஆசைப்படுவான் என்றும், காது குத்துவதன் மூலம் அவனை ஏமாற்றி விடலாம் என்றும், மந்திரவாதத்தின் அடிப்படையில் நம்புகின்றனர்".[18]

## அரங்கேற்று விழா

சிறியவர்கள், பெரியவர்கள் அவர்கள் கற்றுக் கொண்ட கலையைப் பலர் முன்னிலையில் அரங்கில் ஆடிக்காட்டி அரங்கேற்றுவர். இவ்விழா பண்டைக் காலத்தில் இருந்து வருகிறது. இன்றைய நாட்களில் இவ்விழாவை சிறப்பாகக் கொண்டாடுகின்றனர்.

## திருமண விழா

திருமணம் என்பது ஓர் ஆணும், ஒரு பெண்ணும் இணைந்து வாழ்வதற்காகச் சமுதாயத்தால் நடத்தப் படும் ஒரு சடங்காகும். இச்சடங்கு காலமாறுதலுக்கு ஏற்ப விழாவாகிவிட்டது. திருமணம் மதம், இனம், மனப்பாங்கு ஆகியவற்றிற்கு ஏற்ப மாறுபடும்.

திருமணத்தை இன்றைய நாட்களில் கல்யாணம் என்று அழைக்கின்றனர். இச் சொல்லாட்சி ஆரியச் சார்பு மிகுந்த சங்கம் மருவிய காலத்தில் வழக்கில் வந்தமை அக்கால இலக்கியங்கள் வாயிலாக புலப்படு கிறது. சான்றாக ஆசாரக்கோவையில்,

> "அறத்தொடு கல்யாணம் ஆள்வினை கூரை
> இறப்பப் பெருகியக் கண்ணுந் — திறப்பட்டார்"[39]

என்றும்

> "பல்லா ரறியப் பறையறைந்து நாள் கேட்டுக்
> கல்யாணஞ் செய்து கடிப்புக்கு"[40]

என்று நாலடியார் பாடல் மூலம் அறியலாம்.

## பாராட்டு விழா

பாராட்டு விழா என்பது ஒருவர் வீரச்செயல் செய்த போதோ, வெற்றி பெற்ற போதோ, அவரது வீரத்தை யும், செயலையும் பலருக்குத் தெரியும் வண்ணம் ஒரு கூட்டம் போட்டுப் பாராட்டுவதாகும். பண்டைக் காலத்தில் போரில் வெற்றி பெற்ற அரசனைப் புலவர் பலவாறு பாராட்டுவர். இன்றைய நாட்களில் விளை

யாட்டில் பதக்கங்கள் பெற்றவருக்கும், பெரிய அறிஞ ருக்கும் பாராட்டு விழா நடத்துகின்றனர்.

### திறப்பு விழா

புதியதாகக் கட்டிய வீடு, தொழிற்சாலை, திரை யரங்கு, அணைக்கட்டு முதலியனவற்றை முதலில் திறப்பது 'திறப்பு விழா' ஆகும். வீட்டுத் திறப்பு விழா விற்கு 'கிரகப்பிரவேசம்' என்று கூறுவர். திறப்பு விழாவைப் பெரிய தலைவர்கள் வந்து குத்து விளக் கேற்றி வைப்பர். இன்றைய நாட்களில் இவ்விழா சிறப் பான விழாவாகிவிட்டது.

இதுபோன்று மஞ்சள் நீராட்டு விழா, வளைகாப்பு விழா, பூச்சூட்டுவிழா, பெயர்ச்சூட்டுவிழா, அன்ன பிரசன்ன விழா முதலிய பல குடும்ப விழாக்கள் நடை பெறுகின்றன. "ஒரு மனிதனின் வாழ்க்கையில் பதினாறு வகையான குடும்ப விழாக்கள் நடைபெறு கின்றன."

### இலக்கிய விழாக்கள்

இலக்கிய விழா என்பது, நூல்களுக்கு எல்லாம் தலைமகளான நாமகளுக்கும், அவள் அருளால் உருவாகிய சிறந்த கவிஞர்க்கும், அவர்களால் எழுதப் பட்ட நூல்களுக்கும் எடுக்கும் விழாவாகும். இதனைக் குறித்து ஆயபெற்றுள்ளது.

நாமகளாகிய கலைமகளுக்கு 'சரஸ்வதி பூசை விழா' என்று கொண்டாடுவர். கலை மகள் கல்விக்கு அடிப்படையானவள். எனவே அன்று பள்ளிச் சிறுவர்கள் தங்களுடைய புத்தகங்களுக்கு பூசை செய்து கொண்டாடுவர்.

### நூல் வெளியீட்டு விழா

ஒருவர் ஒரு நூலை எழுதி, அச்சிட்டு முடித்ததும் அந்நூலை வெளியிடுவதற்கு ஒரு விழா ஏற்படுத்துவர். அவ்விழாவே 'நூல் வெளியீட்டு விழா' எனப்படும்.

விழாவில் பெரிய தலைவரோ, அறிஞரோ, அந் நூலின் முதற் படியை வெளியிட மற்றொருவர் அதைப் பெற்றுக் கொள்வர். மக்களிடையே நூலைப் பரப்ப வும், ஆசிரியரை அறிமுகப்படுத்தவும் இவ்விழா ஏதுவாக அமைகிறது. பண்டைய காலத்தில் சங்கங் களிலும், அரச சபைகளிலும் இவ்விழா நடைபெற்றது.

## கருத்தரங்கு விழா

கருத்தரங்கு விழா என்பது, படித்த அறிஞர் களிடையே நடைபெறும் கருத்துப் பரிமாற்றம் ஆகும். ஓர் அறிஞர் கட்டுரை படிக்க மற்ற அறிஞர்கள் அதைக் கேட்டு அவர்களுக்கு ஏற்படும் ஐயங்களை அவரிடம் கேட்டு தெளிவு பெறுவர். இவ்விழாவின் மூலம் பல புதிய அறிவுக் கட்டுரைகள் வெளியாக வழியுண்டு.

கருத்தரங்கு விழா முதல் நாளன்று தொடக்க விழா என்றும், கடைசி நாளன்று நிறைவு விழா என்றும் இரண்டு நாளையும் கொண்டாடுவர். அவ்விழாவில் பெரிய தலைவர்கள் வந்து சிறப்புரை ஆற்றுவர். கருத்தரங்கு விழா பல்கலைக் கழகங்களிலும், மன்றங் களிலும் சிறப்பாக நடைபெறுகிறது.

## நூற்றாண்டு விழா

ஒரு அறிஞர் அல்லது கவிஞர் பிறந்த நூறு ஆண்டுகள் ஆகியதை நினைவூட்டும் வகையில் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடுவர். அப்போது அவ்வறிஞர் அல்லது கவிஞரைப் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரைகள், இலக்கியக் கட்டுரைகள், கவிதைகள் என்று பல நூல்கள் வெளியிடுவர். மேலும் கவிதைப் போட்டி, பேச்சுப் போட்டி நடைபெறும்.

கம்பன் விழா, இளங்கோ விழா, பாரதி விழா, பாரதிதாசன் விழா என்று கவிஞர்கள் பெயரிலும் சில விழாக்கள் நடைபெறும்.

## தேசிய விழாக்கள்

நாட்டில் பலவிதமான சமய விழாக்கள், சமுதாய விழாக்கள், கொண்டாடப் பெறுகிறது. இவ்விழாக்கள் குறிப்பிட்ட மதத்தினர்க்கோ, சமுதாயத்தினர்க்கோ இனத்தினர்க்கோ மட்டுமே நடைபெறுவனவாகும். நாட்டிலுள்ள மக்கள் அனைவரும் பொதுவாக மகிழ்ச்சியில் கொண்டாடும் விழாக்களே 'தேசிய விழாக்கள்' ஆகும். இவ்விழாக்கள் அந்நாட்டின் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

### சுதந்திர விழா

ஆங்கிலேயரிடம் அடிமையாக இருந்த நம் நாடு சுதந்திரம் பெற்ற ஆயிரத்து தொள்ளாயிரத்து நாற்பத் தேழாம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் பதினைந்தாம் நாளை ஒவ்வொரு ஆண்டும் விழாவாக கொண்டாடுவர். அன்று பள்ளிகளிலும், அலுவலகங்களிலும், நாடாளு மன்றம் முதலிய இடங்களிலும் கொடியேற்றி இனிப்பு வழங்கி கொண்டாடுவர்.

### குடியரசுதின விழா

சுதந்திரம் அடைந்து மூன்றாண்டுகளுக்குப் பிறகு ஆயிரத்து தொள்ளாயிரத்து ஐம்பத்தொன்றாம் ஆண்டு சனவரி இருபத்தாறாம் நாள் நமது நாட்டை மதச்சார் பற்ற, சர்வ வல்லமை பொருந்திய மக்களாட்சி நாடாக வும், நமக்கு என்று பல சட்டங்களை இயற்றிக் குடியரசு நாடாக ஆக்கப்பட்டது. எனவே இந்நாளை ஒவ்வொரு ஆண்டும் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர்.

### நினைவு நாள் விழாக்கள்

நாட்டு விடுதலைக்காக உழைத்த பெருமக்களின் பிறந்த நாளை அவர்களின் நினைவாக ஒவ்வொரு ஆண்டும் விழா எடுத்துக் கொண்டாடுவர். இதை நினைவு நாள் விழா என்பர்.

அக்டோபர் இரண்டாம் நாள் காந்தி பிறந்த நாள். இதைக் 'காந்தி செயந்தி' என்று கொண்டாடுவர். நேரு குழந்தைகளிடம் அன்பாக இருந்தார். அவர் வேண்டு கோளுக்கு ஏற்ப நேரு பிறந்த நவம்பர் பதினான்காம் நாளைக் 'குழந்தைகள் தின விழா' எனக் கொண்டாடு வர். இராதா கிருட்டிணன் தான் பணிபுரிந்த ஆசிரியர் பதவியை விட்டு விலகி நாட்டுக்காக உழைத்ததால் அவர் பிறந்த செப்டம்பர் ஐந்தாம் நாளை 'ஆசிரியர் தினவிழா' எனக் கொண்டாடுவர். இதே போன்று பல தலைவர்களுக்கு விழா எடுக்கின்றனர். மேலும் மதகுரு மார்களின் பிறந்த நாளையும் சிறப்பாகக் கொண்டாடு கின்றனர்.

## விழா — பயன்கள்

உழைத்துக் கொண்டே இருக்கும் மக்கள் சில நாள் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சான்றோர் எண்ணினர். எண்ணியவர்கள் சில விழாக்களை உருவாக்கி அவற்றின் மூலம் மனித உடலுக்கு ஓய்வும், இன்பமும் அளித்தனர். இதுவே விழாவின் அடிப் படை பயனாகும்.

சில விழாக்களைக் கொண்டாடும் போது முன்னோர் கையாண்ட பழக்க வழக்கங்களை நாமும் பின்பற்றுகிறோம். இதனால் முன்னோர்களது பழைய பண்பாடு வளரவும், நிலைபெறவும் வாய்ப்பு ஏற்படு கிறது.

## ஒற்றுமை உணர்வு

விழாக்களுக்குப் பல ஊர்திகளிலிருந்து பல இன, மொழி மக்கள் வந்து ஒன்று கூடி கொண்டாடுவதால், தமக்குள் வேற்றுமைகளை மறந்து ஒற்றுமையுடன் பழகுவதால் அவர்களிடையே ஒற்றுமை உணர்வும், நாட்டு உணர்வும் உண்டாகிறது.

**உறவுகள்**

"விழாவிற்குப் பல ஊர்களில் இருந்து மக்கள் வந்து ஒன்று கூடுவதனால் இவ்விழாக்களில் பெண், மாப்பிள்ளை ஆகியோரைத் தேர்ந்தெடுப்பதும் உண்டு."[1] நாட்டுப்புறங்களில் இது ஒரு முறையாகும். இம்முறை பண்டைக் காலத்தில் விழாவின் முக்கிய நோக்கமாக இருந்திருக்கக் கூடும். ஏற்கெனவே சம்மந்தியாக உள்ளவர்களுடனும், உறவினர் களுடனும், நல்லுறவை வலுப்படுத்திக் கொள்ள அவர் களை அழைத்து விருந்து அளித்துப் பழகுவதன் மூலம் உறவு வலுபெறுகிறது. மனவேறுப்பாட்டால் பிரிந்த கணவன் மனைவி விழாக்களில் ஒன்றுகூடும் போது இருவரும் பார்த்துப் பழகி தங்கள் உறவைப் புதுப் பித்துக் கொள்வதற்குப் பெரும் வாய்ப்பாக உள்ளது. அடுத்து வெவ்வேறு இடங்களில் வேலை செய்யும் பெற்றோர் சகோதரர் ஒன்று கூடி பழகவும், பேசவும் ஓர் அரிய வாய்ப்பாக அமைகிறது.

இவ்வாறு, புதிய உறவுகளும், விடுபட்ட உறவு களும், ஒன்று சேர விழா ஒரு பாலமாக விளங்குகிறது.

**பண சுழற்சி**

விழாக் கொண்டாட்டங்கள் பொதுவாக புரா ணங்கள், சமயங்கள் பெயரால் ஏற்பட்டு இருப்பினும் விழாவுக்கு அடிப்படையான காரணம் பொருளா தாரமே ஆகும்.

ஓர் ஊரில் விழா நடைபெறின் பல ஊர்களிலிருந்து மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து கூடுவர். அவ் விடத்தில் செல்வந்தர் மட்டும் வாங்கும் சில அரிய பொருள்களும், ஏழை எளியோர்கள் வாங்கும் அளவில் பல மலிவு விலைப் பொருள்களும் விற்பனைச் செய்யப்படும். விழாவினை முடித்துச் செல்லும் மக்கள் பல பொருள்களை வாங்கிச் செல்வர். இதனால் பணம்

ஒருவரிடமோ, ஒரு குழுவினரிடமோ அல்லது ஒரே இடத்திலோ நிலையாக இல்லாமல் பணச் சுழற்சி நடைபெறுகிறது. நாட்டின் பொருளாதாரத்தில் பண வீக்கமோ, பண வாட்டமோ இல்லாது சமநிலை தோன்றுகிறது. இவ்வாறு விழாக் கொண்டாடுவதால் பணச் சமநிலை அமைகிறது.

எனவே விழா கொண்டாடுவதின் மூலம் இன்பமும், முன்னோர்களின் பழக்க வழக்கங்களைக் கடைபிடிக்கவும் சாதிவேற்றுமை போக்கவும், உறவுகள் ஒன்றுபடவும் ஆகிய பயன்கள் ஏற்படுகின்றன.

## விழாவும் பிறதுறையும்

விழாவோடு சந்தை, கலை, விளையாட்டு ஆகியன எவ்வாறு தொடர்பு கொண்டுள்ளது என்பதைப் பற்றி ஆராயப் பெறுகிறது.

## விழாவும் — சந்தையும்

சந்தை எங்கு கூடுகிறதோ அங்கு விழாவும், விழா எங்கு நடைபெறுகிறதோ அவ்விடத்தில் சந்தையும் கூடும். இதனை ஆங்கிலத்தில் 'Fair and Festival' என்று கூறுவர். சந்தையில் பல மக்கள் ஒன்று கூடிப் பழகுவதால் அவர்கள் மனக்கவலையை மறந்து இன்புறுவர்.

நாட்டுப்புற மக்கள் தங்களிடம் இருக்கும் பொருள்களை விற்கவும், இல்லாதப் பொருள்களை வாங்கிக் கொள்ளவும் ஒரு சிறந்த இடமாகச் சந்தை பயன்படுகிறது. சந்தையில் பொதுவாக எல்லாப் பொருள்களும் விற்பர். விழா நடைபெறும் இடத்தில் சந்தைகள் கூடும். சான்றாக கார்த்திகை தீப விழா காலத்தில் திருவண்ணாமலையில் நான்கு நாட்கள் கால்நடைச் சந்தை கூடும். இவ்வாறு விழா காலத்தில் சந்தை கூடுவது வழக்கமாகும். நாட்டுப்புற ஆடவர்களாலும், பெண்டிராலும் திருவிழா இல்லாத ஒரு பெரிய

சந்தையையோ, சந்தை இல்லாத பெரிய திருவிழா வையோ நினைத்துப் பார்க்கக் கூட முடியாது"[4] என்று சோமலெ கூறுகிறார்.

இவ்வாறு சந்தையும் விழாவும் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாக விளங்குகின்றது.

## விழாவும் கலையும்

விழாவுடன் கலை நெருங்கிய தொடர்புடையது. தெய்வ உணர்வும், கலையுணர்வும் வாழ்க்கையில் இன்றியமையாதன ஆகும். எனவே இவை இரண்டும் ஒன்றாகவே இணைந்து காணப்படுகின்றன. "அழகும் கலையும் தெய்வத்தின் திருச்சின்னங்கள். தெய்வ தத்து வத்தைப் பரப்பும் கலைக்கு, அழகு இயல்பாகவே நிறைந்து விடுகிறது. தேவாலயங்களைக் கலைகளுக் கெல்லாம் உறைவிடமாக்கிச் செழிக்க வைத்த பெருமை நம் நாட்டுக்கு உண்டு."[5] கலையுணர்ச்சியுடன் கலை நிகழ்ச்சிகளும் கலை நிரம்பிய வேலைகள் பல செய் வதற்கு மிகவும் வாய்ப்பளிப்பது விழாக்களே ஆகும்.

கோயில் விழாவின் போது கடவுள் உலாவரும். அவ்வாறு உலா வருவதற்கென வெங்கலம், பஞ்ச லோகம், மண் ஆகியவற்றால் சிலையும், மரத்தால் பல்லக்கும், தேரும் செய்வர். இவற்றால் கலை சிறந்து விளங்குகிறது.

விழாக் காலங்களில் வீட்டை அலங்கரித்தல், கோலம் போடுதல், தோரணம் கட்டுதல், பாடுதல், ஆடுதல், நாடகம் நடித்தல், கரகாட்டம், கோலாட்டம், கும்மி அடித்தல், சிலம்பாடுதல் போன்ற கலை ஆட்டங்கள் நடைபெறுகின்றன. ஆடல், இசை, ஓவியம், சிற்பம் முதலிய கலைகள் மக்களின் நாகரிக வாழ்க்கைக்குச் சான்றுகள். நம் முன்னோர்கள் அக் கலைகளை கடவுள் வழிபாட்டுடன் ஒன்றாக இணைத்து வளர்த்தனர். இன்றும் அவ்வாறு ஒன்றாக இணைந்து சிறப்பாக வளர்ந்து வருகிறது.

இதுபோன்ற விழாவினால் கலைகள் வளரவும், அக்கலைகள் அழியாமல் மக்களிடம் நிலை பெற்றிருக்கவும் விழாக்கள் பயன்படுகின்றன.

## விழாவும் விளையாட்டும்

விளையாட்டு ஒரு விழாவாகும். மக்கள் இன்பமாக இருக்கும் போது விளையாடுவர். விளையாடுகிறான் என்றால் அவன் இன்பமாக இருக்கிறான் என்று பொருள். எனவே விழா காலங்களில் மக்கள் விளையாடி மகிழ்வர்.

விழா கொண்டாடும் நாட்களில் மக்கள் வேலைக்குப் போகாமல் வீட்டிலேயே இருப்பதால் நேரத்தை இன்பமாக கழிக்கப் பல விளையாட்டுகளை விளையாடுவர். காட்டாக ஜல்லிக்கட்டு, சடுகுடு, முதலிய விளையாட்டுகளை விளையாடுவர். இவையின்றி சில விளையாட்டுப் போட்டிகளும் நடைபெறும். பெண்கள் பூசை முடித்த பிறகு வீட்டிலேயே உருள்கட்டை, பல்லாங்குழி, முதலிய விளையாட்டுகளை விளையாடி இன்புறுவர். சிறுவர் காலை முதல் மாலை வரை விளையாடி மகிழ்வர்.

## விழாவும் அறிவியலும்

விழா கொண்டாட்டங்களில் கடைபிடிக்கும் சில பழக்கங்கள், வெறும் மூட பழக்கங்கள் என்று கூறமுடியாது. அறிவியல் முறைப்படி இது நன்மை தரும்.

விழா கொண்டாடுவதால் பல ஊர்களிலிருந்து மக்கள் வருகின்றனர். அவர்கள் அனைவரும் ஒன்றாகக் கூடிக் கொண்டாடுவதன் மூலம் தங்கள் துன்பத்தை மறந்து இன்பம் பெறுகின்றனர். ஒருவன் தன் மன எண்ணங்களைத் தன்மனதிலேயே இல்லாமல் பிறரிடம் கூறுவதால் அவனுடைய மனம் அமைதியடைகிறது. அவ்வாறு கூற இயலாதவன் மனநிலை

தவறி மனநோய்களுக்கு ஆளாகிறான் என்பது உளவியல் கருத்து. பிறரிடம் கூறமுடியாத துன்பங்கள் அல்லது பிறரிடம் கூறும் மனபக்குவம் இல்லாதவர்கள் துன்பங்களை இறைவனிடம் முறையிட்டு வணங்குவதால் அத்துன்பத்தைக் கடவுள் போக்குவார் என நினைத்து அதைப்பற்றி கவலை இன்றி மன நிம்மதியுடனும், இன்பமாகவும் இருப்பான். கடவுளை வணங்குவதும் உளவியல் முறைப்படி நன்மையைத் தரக் கூடியது ஆகும்.

## மஞ்சள் தோய்த்த ஆடை

விழாவிற்குச் செல்லும் பக்தர்கள் மஞ்சளில் நனைத்த ஆடைகளை உடுத்திச் செல்வர். இவ்வாறு அணிந்து செல்வது அறிவியல் முறைப்படி நன்மையைத் தரும். விழாவிற்குப் பல ஊர்களிலிருந்து மக்கள் வருவதால் சிலவகை நோய்கள் ஒருவரிடமிருந்து மற்றொருவருக்குப் பரவ இடமுண்டு. இதைத் தடுக்கவே முன்னோர்கள் மஞ்சள் நனைத்த ஆடைகளை அறிவியல் முறைப்படி உடுத்திச் செல்ல வேண்டுமென்று கூறினார்கள்.

மஞ்சள் ஒரு ‘கிருமி கொல்லி’; எனவே மஞ்சள் தோய்த்த ஆடைகளை அணிந்திருப்பவர்கள் நச்சுக் கிருமிகள் மூலம் வரும் நோய்களில் இருந்து விடுபட்டு வாழ்வர். வீடுகளிலும் மஞ்சள் நீர் தெளிப்பர். இதனால் வீட்டிலுள்ள பூச்சிகள், தேள் முதலியன இறந்து விடும்.

இவ்வாறு மஞ்சள் நனைத்த ஆடை உடுத்திச் செல்வதும், மஞ்சள் நீர் தெளிப்பதும் நோய் வராமல் தடுக்கவும், வீட்டில் உள்ள சில பூச்சிகளை அழிக்கவும் ஆகும். நாகரிகம் வளர்ந்த இந்நாளில் ஒரு சிலரே மஞ்சள் தோய்த்த ஆடைகளைப் பயன்படுத்துகின்றனர்.

## குளத்தில் உப்பு போடுதல்

விழா நடைபெறும் இடத்திலுள்ள குளத்தில் பக்தர்கள் உப்பை போடுவர். இவ்வாறு செய்வது அவர்களின் பிரார்த்தனைக்காகும். இதில் அறிவியல் பங்கும் உள்ளது. விழாக் காலத்தில் மக்கள் குளத்தில் குளிப்பதால் அவர்களின் உடலிலிருக்கும் அழுக்கு களும் சில நோய்க் கிருமிகளும் நீரில் கலந்துவிடு கின்றன. அதே நீரில் மற்றவர்கள் குளிக்கும் போது அந்த நோய்க் கிருமிகள் அவர்களைத் தாக்கும். இவ்வாறு நோய்கள் பரவுகின்றன. இவற்றைத் தடுக்க குளத்தில் உப்பு போடுவதை நமது முன்னோர் கையாண்டு வந்தனர். உப்பு ஒரு 'கிருமிகொல்லி' ஆகும்.

## தீர்த்தம்

விழாவிற்குச் சென்று கடவுளை வணங்கிய பின்பு அங்குப் பிரசாதமாகத் தீர்த்தம் கொடுப்பர். இந்தத் தீர்த்தத்தில் துளசி இலை போட்டு இருப்பர். இதைப் பருகுவதால் உடலில் வெப்பநிலை குறையும். மேலும் மூச்சுக்குழல் சுழற்சி, வயிற்றுக் கோளாறு போன்றவை களைக் கட்டுப்படுத்தும். எனவேதான் நீருடன் துளசி யைக் கலந்து மக்களுக்கு தீர்த்தமாகக் கொடுக் கின்றனர்.

இவ்வாறு விழாக் காலங்களில் கடைபிடிக்கும் சில பழக்கங்கள் அறிவியல் முறைப்படி நன்மை கருதியே முன்னோர் கையாண்டு வந்தனர்.

## முடிவுகள்

விழா என்ற சொல் 'விழை' என்பதிலிருந்து தோன்றியது. வடமொழியில் உற்சவம் என்றும், ஆங்கிலத்தில் ஃபெஸ்டிவல் என்றும் அழைப்பர்.

பண்டிகை, கொடை, விழா, திருவிழா முதலியன விழாவினையே குறிக்கும்.

அகராதிகள், கலைக்களஞ்சியம் மகிழ்ச்சியைத் தரவல்ல ஒரு நிகழ்ச்சியை விழா என்று கூறுகின்றன.

விழிப்புணர்வு ஏற்படுத்துதல், ஒற்றுமை ஏற்படுத்துதல், பழக்க வழக்கங்கள், பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றை வளர்த்தல், துன்பத்தை மறந்து இன்பமாக இருத்தல், பக்தி உணர்வையும் கடவுள் உணர்வையும் மக்களிடையே பரப்புதல் ஆகியன விழாவின் நோக்கமாகும்.

விழா கொண்டாடும் போது கொடியேற்றல், விழா வறைதல், நல்ல நாளில் விழாவெடுத்தல், அலங்கரித்தல் முதலியன இடம் பெறுகிறது.

சமய விழாக்கள், சமுதாய விழாக்கள், இலக்கிய விழாக்கள், தேசிய விழாக்கள் என விழாவை நான்கு வகையாகப் பிரிக்கலாம்.

உழைத்து களைத்த மக்கள் இன்பம் பெறவும், இனம், மொழி ஒருமைப்பாடு ஏற்படவும், உறவுகள் ஒன்றுகூடவும், நாட்டில் பொருளாதாரம் சமநிலையில் இருக்கவும் விழாக்கள் பயன்படுகின்றன.

விழாக்கள் சமயத்தோடு மட்டுமன்றி சந்தை, கலை, விளையாட்டு முதலிய துறைகளுடன் நெருங்கிய தொடர்புடையனவாக விளங்குகின்றன.

விழா கொண்டாட்டங்களும், அப்போது கடைபிடிக்கும் சில பழக்கங்களும் அறிவியல் முறைப்படி நன்மையே ஆகும்.

## குறிப்பெண் விளக்கம்

1. க. காந்தி, *தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்*, ப. 51.
2. மேற்படி, ப. 52.
3. M. Arunachalam, *Festivals of Tamil Nadu, Introduction*, p. 9.

4. *Ibid*., p. 2.
5. கலி 83:14.
6. பரி. 11:78.
7. புறம். 22.1-6.
8. க. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 53.
9. க. காந்தி, மு.நூ., ப. 51.
10. க. காந்தி, மு. நூ., ப. 52.
11. கழகப் புலவர் குழுவினர், (தொ. ஆ.), கழகத் தமிழ் அகராதி; ப. 858.
12. — மதுரைத் தமிழ்ப் பேரகராதி, இரண்டாம் பாகம், ப. 610.
13. A. Chidambaranatha Chettiar (C. E.), *English-Tamil Dictionary*, p. 380.
14. தி. சு. அவினாசிலிங்கம் (பதி), கலைக்களஞ்சியம், தொகுதி 9, ப. 418.
15. Edwen R. A. Seligman, *Encyclopaedia of the Social Sciences*, Vol. 5.
16. எஸ். நடராஜன் (நஜன்), தமிழர் பண்டிகைகளும் பண்பாடும், ப. 7.
17. க. காந்தி, மு. நூ., ப. 53.
18. ம. ரா. பாலகணபதி, புதுக்கல்விநூல், ப. 132.
19. அ. மு. பரமசிவானந்தம், தமிழ் நாட்டு விழாக்கள், ப. 7.
20. நற். 200:2-4.
21. க. காந்தி, மு. நூ., ப. 56.
22. திருப்பாவை. பா. 1.
23. அக. 176: 14-15.
24. அக. 326: 5-8.
25. நற். 170: 1-4.
26. மாருதிதாசன், இந்து சமயக் கருத்துக்கள், முன்னுரை, ப. 7.

27. கா. மு. பாபுஜி, "பொங்கல் விழா", வைத்தகிரி, ப. 41.
28. M. Arunachalam, *Op. Cit.*, P. 239.
29. தேவாரம் இரண்டாம் திருமுறை, பா. 37:4.
30. தி. அ. அவினாசிலிங்கம் (பதி), கலைக்களஞ்சியம் தொகுதி 6, ப. 37.
31. சோமலெ (எஸ். எம். எல். லட்சுமணன் செட்டியார்) தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப. 123.
32. தி. அ. அவினாசிலிங்கம் (பதி.) கலைக்களஞ்சியம் தொகுதி-3, ப. 720.
33. தி. அ. அவினாசிலிங்கம் (பதி.) கலைக்களஞ்சியம் தொகுதி 2, ப. 201.
34. தி. அ. அவினாசிலிங்கம் (பதி.), கலைக்களஞ்சியம் தொகுதி 8, ப. 389.
35. தி. அ. அவினாசிலிங்கம் (பதி.), கலைக்களஞ்சியம் தொகுதி 8, ப. 657.
36. தி. அ. அவினாசிலிங்கம் (பதி.), கலைக்களஞ்சியம் தொகுதி 6, ப. 677.
37. தொல். பொருள். நூ. 88: 7-8.
38. சு. சண்முகசுந்தரம், திருநெல்வேலி மாவட்ட நாட்டுப் புறப் பாடல்களின் சமுதாய அமைப்பு, ப. 319.
39. ஆசா. 85: 1-2.
40. நால. 86: 1-2.
41. M. Arunachalam, *Op. Cit.*, P. 12.
42. சோமலெ. மு. நூ., ப. 128.
43. சோமலெ, மு. நூ., ப. 145.
44. சௌரி, இந்தியாவின் கலையும் கலாச்சாரமும், ப. 32.

## இயல்-2

# சங்க இலக்கியங்களில் விழாக்கள்

சமுதாய மக்களின் பழக்க வழக்கங்களை அக்காலத்தில் தோன்றிய இலக்கியங்கள் வாயிலாக அறியலாம். தமிழ் மொழியின் சிறப்புற்றுத் திகழும் சங்க இலக்கியங்கள், அக்கால மக்கள் வாழ்வியலினை வளமுறக்காட்டி நிற்கும் கருத்துக் கருவூலங்களாகும். எனவே, சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, ஆகியவற்றின் துணையுடன் தமிழர்கள் பலவகையான விழாக்களைக் கொண்டாடியதை அறியலாம். அவ்விழாக்களைச் சமய விழாக்கள், சமுதாய விழாக்கள், என இருவகைகளாகப் பிரிக்கலாம். முருகன் விழா, கார்த்திகை விழா, இந்திர விழா, காமன் விழா, ஓண விழா, பிற தெய்வ விழாக்கள், ஆகியன சமய விழாக்கள். புனலாட்டு விழா, பூந்தொடை விழா, உள்ளி விழா, பிறந்தநாள் விழா முதலியன சமுதாய விழாக்கள் ஆகும். இவ்விழாக்களைப் பற்றியும், எவ்வாறு கொண்டாடினர் என்பதைப் பற்றியும் இங்கு ஆராயலாம்.

### விழா — வேறுபெயர்கள்

சங்க காலத்தில் விழாவை விழவு, சாறு, என்று வேறு பெயர்களில் அழைத்தமைப் பின்வரும் சான்றுகள் மூலம் அறியலாம்.

> "அழியா விழவின் அஞ்சுவரு மூதூர்"[1]
>
> "விழவுமேம் பட்ட பழவிறல் மூதூர்"[2]

என்ற வரிகள் மூலம் விழவு என்று அழைத்தமைத் தெரிகிறது.

சாறு என்று அழைத்ததைப் பின்வரும் வரிகளின் வாயிலாகப் புரிந்து கொள்ளலாம்.

> *சாறு கொண்ட களம் போல்"*[3]
> *"சாறயர் மூதூர்"*[4]

சாறு என்பதற்கு விழா என்று பொருள் உண்டு.

> பெருவிழா விளக்கம் போலப் படவுடன்"[5]

என்ற பாடல் வரியின் மூலம் விழா என்று அழைத் தமையைத் தெரிந்து கொள்ளலாம்.

இவற்றுள் விழவு என்ற சொல்லை மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளனர். வேறு இரண்டையும் குறை வாகவே கையாண்டுள்ளனர்.

**கால்கோள்**

விழா தொடங்குவதற்கு முன்பு கால்கோள் செய்து தொடங்கினர்.[6] கொடியேற்றியும் விழா தொடங்கினர் என்பதை

> "சாறயாந் தெடுத்த உருவப் பல்கொடி"[7]

என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது. இவ்விழாவைப் பற்றிய செய்திகளைக் குயவன்[8] மூலம் மக்களுக்குத் தெரிவித்தனர். மேலும் பறையறைந்தும் தெரி வித்தனர்.[9]

**விழா கொண்டாட்டங்கள்**

விழாக்கள் மூதூர்களில் நடைபெற்றன. இவ் விழாக்களை அந்தணர் தொடங்கினர் என்பதை

> "விரி நூலந்தணர் விழவு தொடங்க"[10]

என்னும் பரிபாடல் மூலம் அறியலாம். விழாக்களில் பலர் தொழுதனர் என்பதை

> ... ... பலர்தொழ
> விழவுமேம் பட்ட பழவிறல் மூதூர்"[11]

என்ற வரிகள் வாயிலாக அறியலாம்.

விழா நடைபெறும்இடங்களில் புதுமணல் பரப்பி.[12] விழா கொண்டாடினர். இவ்விழாக்களைக் காணப் பல ஊர்களிலிருந்து மக்கள் திரளாக வந்தனர். அத்தகைய அயலூரார்க்கும், பாணர், பொருநர் முதலியோர்க்கும் உணவு படைத்தனர்.[13] மலைநாட்டு ஊர்களில் விழாவைக் காண வந்தவர்க்கு மிடாச்சோறு வரையாது வழங்கப்பட்டது[14] எனக் குறிஞ்சிப்பாட்டுக் கூறுகிறது.

### இசை

விழாவில் குழல், யாழ், முழவு, முரசு ஆகிய இசைக் கருவிகள் முழங்கின.[15] முழவு கண்ணுறக்கமின்றி முழங்கிக் கொண்டிருந்தது.[16] இவற்றுக்கு ஏற்ப பாடு மகளிர் பாடினர். இத்தகைய இசை ஒலிகளைக் கேட்டு மக்கள் இன்புற்றனர்.

### கூத்து

விழாக்களின் போது குரவைக் கூத்தும் துணங்கை கூத்தும் நிகழ்ந்துள்ளன.[17] இத்தகைய கூத்துகளை ஆணும், பெண்ணும் இணைந்தும்[18] தனித்தும்[19] ஆடினர் என்பதை அறியலாம்.

### இடமும் காலமும்

சங்க காலத்தில் விழாக்கள் சிற்றூரிலும்[20] மூதூரிலும்[21] நடைபெற்றது. விழாவுக்குரிய காலம் வேனிற் காலமாக விளங்கியது என்று தெரியவருகிறது.[22] விழாக்கள் காலையிலும், மாலையிலும், கொண்டாடினர் என்பதைப் புனலாட்டு விழா[23] கார்த்திகை விழா[24] மூலம் அறியலாம்.

### அலங்கரித்தல்

விழாவின் போது மக்கள் பல அணிகளை அணிந்தும்,[25] பலவாறு அலங்கரித்தும் கொண்டனர்[26] என்பதைச் சங்கப் பாடல்கள் வாயிலாக அறியலாம். விழாவிற்குச் சென்ற மகளிரின் ஒப்பனையினை

"உடுத்தும் தொடுத்தும் பூண்டும் செரீஇயும்
தழையணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி
விழவொடு விருதி நீயே"[11]

என்று குறுந்தொகை உரைக்கிறது.

இதுபோன்று, சங்ககால மக்கள் கால்கோள் செய்து, கொடியேற்றி பிறகு மூதூர்களில் விழா கொண்டாடினர்.

## முருகன் விழா

முருகன் சிவனுக்கு இளையமகன் ஆவான். முருகனுடைய உருவ அழகைக் குறுந்தொகையில் 'தாமரை புரையும் அழகிய திருவடிகளையும் செக்கச் சிவந்த ஆடையினையும் குன்றினைப் போன்று பிளந்த வேலினையும் உடையவன் எனக் கூறுகிறது.'"[12] கடப்ப மாலையை அணிந்தவன். மயிலைக் கொடியாகக் கொண்டுள்ளவன்.[13] பரிபாடலில் முருகன் பிறப்பு, வளர்ச்சி, வரலாறு குறித்து விரிவாகக் கூறப்பெற்றுள்ளன.

கொற்றவையின் மைந்தன்; தெய்வயானைக்கும், வள்ளியம்மைக்கும் கணவன்; தேவர் படைத் தலைவன்; மாலை அணிந்த மார்பன்; எல்லா நூல் களையும் அறிந்தவன்; போர்த்தொழிலில் சிறந்தவன்; வேலையுடையவன்; குறிஞ்சி நிலத்தின் தெய்வம்; வீட்டின்பத்தை விரும்பி வந்தவர்க்கு அருள் புரிபவன்; இரந்து வந்தோர்க்கு வேண்டுவன கொடுத்து அவரைப் பாதுகாப்பவன். இவ்வாறு திருமுருகாற்றுப் படை கூறுகிறது.[14]

## முருகன் வழிபாடு

"வேலும், சேவலும் முருகனுக்குரியவை. இவை இரண்டும் வரலாற்றுக் காலத்திற்கு மிக முற்பட்ட பழைமை வாய்ந்த ஆதிச்ச நல்லூர்ப் புதை பொருட் கிடையிற் கிடைத்துள்ளன. .... இவற்றை நோக்க

முருக வணக்கம் மிகப்பழைய காலத்திலிருந்தே தமிழரிடம் இருந்து வருகிறது என்பது தெளிவாகும்".[31] தொல்காப்பியர் நானிலத்துள் குறிஞ்சி நில தெய்வம் முருகன் என்பதை

"சேயோன் மேய மைவரை உலகமும்".[32]

என்று கூறுகிறார்.

இவைகளிலிருந்து முருகன் வழிபாடு பழந்தமிழர் களிடமிருந்து வருகிறது என்பது புலப்படும்.

## விழா கொண்டாட்டம்

"சங்க காலத்தில் குறிஞ்சி நில மக்களிடத்தே வெறி யாட்டு என்னும் வெறிக் கூத்து மிகப் பெரிதும் பரவி யிருந்தது. 'வெறி' என்னும் சொல் தெய்வத்தைக் குறிப்பதாகும்".[33] பெண்களின் காம நோய்க்குக் காரணமாக முருகன் அணங்கியதாகக் கருதி வெறி யாட்டு நிகழ்வித்து முருகனை வழிபட்டனர். இதனினும் வேறுபட்ட வழிபாட்டு நிலையைத் திருமுருகாற்றுப் படை கூறுகிறது.

ஊர்மக்கள் ஒன்றாகக்கூடி சிறுதினை, மலர்கள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டும், முருகனது கொடி யான சேவல் கொடியோடு சென்று ஆட்டைப் பலி கொடுத்தும் விழா கொண்டாடினர் என்பதை திருமுரு காற்றுப்படை

"சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியோடு வயிற்பட நிறீஇ
ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்."[34]

என்று கூறுகிறது.

முருகன் விழா, கால்கோள் செய்த பின்பு விழா எடுத்தனர் என்பதை கலித்தொகை

"ஆலமர் செல்வன் அணிசால் மகன்விழாக்
கால்கோள் தூக்கிக் கதுமென நோக்கி"[35]

என உணர்த்துகின்றது.

இவற்றின் மூலம் முருகன் வழிபாடு முற்காலத்தி லிருந்து வருகின்றது என்பதையும், அவனுடைய விழா ஊர்மக்கள் ஒன்றுகூடி கால்கோள் செய்த பின் கொண் டாடப்பட்டது என்பதையும் அறியலாம்.

**கார்த்திகை விழா**

கார்த்திகைத் திங்களிலே, கார்த்திகை நட்சத்திரமும் பூராண திதியும் கூடிய நாளிலே வீடெங்கும் விளக் கேற்றிக் கொண்டாடுவதைக் 'கார்த்திகை தீப விழா' என்பர். கார்த்திகை என்பதற்கு 'அழல்' என்றும் 'எரி' என்றும் பெயர்களுண்டு. "அழல் சேர் குட்டம்"[11] எனச் சிலம்பிலும், "எரிகடை வேழம்" எனப் பரிபாட லிலும் வருகிறது. இதற்குப் பரிமேலழகர்

"அங்கியைத் தெய்வமாக உடைய கார்த்திகை"[12]

என பொருள் கூறுகிறார்.

இந்த நாளில் சிவபிரான் திரிபுர அசுரரைக் கண்டு சிரித்து எரித்ததை நினைவூட்டும் வகையில் இவ்விழா கொண்டாடப்படுகிறது. கார்த்திகையன்று திருவண்ணா மலையில் சிவபிரான் ஒளியாகக் காட்சியளித்தார்; எனவே விளக்கேற்றி ஒளியை வணங்குகின்றனர்.

"கார்த்திகை திங்கள் அடை மழையில் கதிரொளி காணாமல் வாடி ஒடுங்கிக் கிடந்த மக்கள் நன்றாக உலவித் தங்கள் வாட்டத்தை நீக்கிக் கொள்ளக் கதிரவன் ஒளியைக் காண விரும்பி மலைமீது விளக் கிட்டு மகிழ்வதைக் கார்த்திகை விளக்குக் குறிக்கிற தெனலாம்."[13]

கார்த்திகை விழாவை பண்டைக் காலத்திலிருந்தே தமிழ் மக்கள் கொண்டாடி வருகின்றார்கள் என்பதை அக்கால இலக்கியங்களின் வாயிலாக அறிந்து கொள்ளலாம். இதன் பழமையைக் கருதி 'தொல் கார்த்திகை' என்றும் இவ்விழாவை மகளிர் கொண்டாடி

னர் என்பதையும் தேவாரப் பாடல் ஒன்றின் வாயிலாக அறியலாம்.[39] கார்த்திகை விழாவினை பெருவிழா என்று அழைத்தமை

"வேனி லத்தத் தாங்கண் வானுலந்து
அருவி யான்றே வுயர்சிமை மருங்கிற்
பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்."[40]

என்பதன் மூலம் அறியலாம்.

கார்த்திகை சாறு என்றதை

"கார்த்திகைச் சாற்றில் கழி விளக்கைப்
போன்றனவே."[41]

என்பதன் வாயிலாகவும் அறியலாம்.

கார்த்திகை விழாவின்போது, முழுச் சந்திரன் கார்த்திகை நட்சத்திரத்தோடு சேரும் இரவு காலத்தில், தெருக்களில் மூதூர் மக்கள் விளக்குகளை ஏற்றினர் என்பதை அகநானூற்றில் நக்கீரர் பாடிய பாடல் ஒன்றில்

மழைகால் நீங்கிய மாக விசும்பிற்
குறுமுயல் மறுநிறங் கிளர மதிநிறைந்து
அறுமீன் சேரு மகலிருள் நடுநாள்
மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவுடனயர வருகதில் லம்ப"[42]

என்றவாறு கூறுகிறார்.

கார்த்திகை விளக்குகளில் நெய் ஊற்றி ஏற்றினர். அவ்விளக்கிலிருந்து சுடர்தெரித்து விழுவது காற்றால் பூக்கள் சிதறி விழுவது போல் இருக்கிறது என்று ஒப்புமை கூறப்படுகிறது.[43] கார்த்திகை விளக்குகள் இரவில் எவ்வாறு இருந்தது என்பதை, இலையற்ற இலவமரம் பூத்த காட்சியோடு உவமை கூறப் பட்டுள்ளது என்பதை

"பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்
இலையில மலர்ந்த இலவமொடு
நிலையுயர் பிறங்கல் மலையிறந் தோரே"[44]

என்னும் வரிகள் உணர்த்துகின்றன.

சங்க கால மக்கள் கார்த்திகை விழாவைக் கொண் டாடிய விதமும், அவ்விழாவில் மேற்கொள்ளப்பட்டச் சடங்குகளையும் போலவே இன்றும் தமிழக மக்கள் கார்த்திகை விழாவில் மேற்கொள்வதைக் காணலாம். சங்க காலத்திம் நெய்விளக்கு ஏற்றி வைத்து வழி பட்டனர் என்பதைச் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறிய முடிகிறது. தற்காலத்தில் எண்ணெய் கொண்டே விளக்கேற்றி வைத்து வழிபடுதலைக் காணமுடிகிறது. இதற்கு பொருளாதார அடிப்படையே முக்கியக் காரண மாக அமைகிறது. பொருளாதார நிலைமை, சடங்கு களும், ஆசாரங்களும் மறைய வழிவகுக்கின்றது என்பதை உணரலாம்.

## இந்திர விழா

இந்திர விழா என்பது இந்திரனுக்கு எடுக்கும் ஒரு விழாவாகும். இந்திரனை வேதகாலத்தில் சிறந்த கடவுளாக வணங்கினர்.

ஆயிரம் கண்களை உடையவன். நூறுவேள்வி களைச் செய்து இந்திரலோகம் அடைந்தவன். நான்கு தந்தங்களை உடைய ஐராவதம் என்னும் வெள்ளை யானையை உடையவன் என்பதை

> "நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத் தூறுபல்
> வேள்வி முற்றிய வென்றகு கொற்றத்து
> ஈரிரன் டேந்திய மழுப்பி எழினடைத்
> தாழ்பெருந் தடங்க யுயர்த்த யானை
> எருத்த மேறிய திருக்கினர் செல்வனும்"[16]

என்று திருமுருகாற்றுப்படை கூறுகிறது.

சங்க இலக்கியங்களில் இந்திரனைப் பற்றிக் குறிப்புகள் வரினும்[17] இந்திரனுக்கு விழாவெடுத்துக் கொண்டாடியதைப் பற்றி இரண்டு பாடல்களில் மட்டுமே காணப்படுகிறது. ஐங்குறு நூற்றில் இந்திர னுக்கு விழா எடுத்தமைப் பற்றி

*"இந்திர விழவிற் பூவி னன்ன*
*புன்றலைப் பேடை வரிநிமலகவும்".*[47]

எனும் பாடல் வரிகள் மூலம் அறிய முடிகிறது.

இப்பாடல் வயிலாக, இந்திர விழாவில் மலர்களை மிகுதியாகப் பயன்படுத்தியும், கணிகையர் பாடல் ஆடல் நிகழ்த்தியமையும் புலப்படுகிறது.

பதிற்றுப்பத்தில் 'பலபூ விழா'[48] என்று ஒரு குறிப்பு வருகிறது. இதற்கு உரையாசிரியர் "பல்வகைப் பூக்களைக் கொண்டெடுக்கும் விழா இந்திர விழாவென வறிக"[49] என்று கூறுகிறார். இதன் மூலம் இந்திர விழாவைப் 'பலபூ விழா' என்ற பெயரிலும் கொண்டாடினார்கள் என்பதை அறியலாம்.

மேற்கூறிய இருபாடல்களும் இந்திர விழா மருத நிலத்தில் கொண்டாடியமையைத் தெரிவிக்கின்றன. இந்திரன் மேகத்தின் தலைவன், எனவே மருத நில மக்கள் பயிர் தொழில் சிறக்க இவனை வழிப்பட்டமை மிகவும் பொருத்தம் ஆகும். இதனை உறுதி செய்யும் வண்ணம் தொல்காப்பியர் இவனை மருத நில தெய்வ மாகக் கூறுகிறார்.[50]

சங்க காலத்தில் இந்திரனுக்கு விழா எடுத்தமைப் பற்றிக் கூறும் இவ்விரு பாடல்களும் உவமை நிலையிலேயே கூறுகின்றன. சங்க மருவிய காலத்தில் தான் இந்திரனுக்குச் சிறப்பாக விழா கொண்டாடினர் என்பதைச் சிலம்பிலும்,மணிமேகலையிலும் விரிவாகக் காணமுடிகிறது.

மேற்கூறிய செய்திகளின் வாயிலாக இந்திர விழாவில் மலர்களை மிகுதியாகப் பயன்படுத்தினர் என்பதையும் சங்க காலத்தில் இந்திரன் வழிபாடு மக்களிடையே செல்வாக்கு பெறவில்லை என்பதையும் அறியலாம்.

### காமன் விழா

காமன் இந்துமத கடவுளர்களில் ஒருவன் ஆவான். இவனை அழகின் தேவன் என்று புராணங்கள் கூறு கின்றன. மலர் அம்புகளை ஏவி, மக்களுக்குக் காமத்தை உண்டாக்குபவன். பெண்கள் தமக்கு நல்ல கணவன் அமைய வேண்டுமென்று காமனை வழிப் படுவர். காமன் விழா மக்கள் இன்பமாகப் பொழுதை கழிக்கக் கொண்டாடிய ஒரு விழாவாகும்.

தொல்காப்பியத்தில் காமனைப் பற்றிக் குறிப்பு ஏதுமில்லை. சங்க இலக்கியங்களில் கலித்தொகை, பரிபாடல் இவை இரண்டே காமனைப் பற்றி மிகுதி யாகப் பகர்கின்றன. காமனை மன்மதன்[51], காமவேள்[52], உயர்ந்தவன்[53] வில்லவன்[54], முதலிய பெயர்களில் அழைத்தமை அறியலாம். காமன் செயலால் பிரிந் திருக்கும் காதலர்கள் மிகவும் துன்புறுவர்[55]. இத் துன்பத்தில் இருந்து தங்களைக் காத்துக்கொள்ள காமன் கோயிலுக்கு வழிப்படச் செல்வர். அவ்வாறு செல்லும் போது காய்ச்சிய பாலினைப் படைத்து வழிப்பட்டனர்.[56]

காமனுக்குரிய விழா காலம் இளவேனிற் காலம் என்பதை

> "இருங்குயி லாலப் பெருந்துறை கவின் பெறக்
> குழவி வேலில் விழாவெதிர் கொள்ளும்"[57]

என்ற பாடலின் வரிகள் தெரிவிக்கின்றன. காமன், உயர்ந்தவன் என்றும் அவனுடைய விழாவில் பரத்தை யருடன் ஆண்கள் இன்பமாக விளையாடி நாளைக் கழித்தனர் என்றும் கலித்தொகை பாடல் ஒன்றில்

> "உறவியாம் ஒளிவாட உயர்ந்தவன் விழவினுள்
> விறவிழை யவரோடு விளையாடு வான்மன்னோ"[58]

என்று கூறப்பட்டுள்ளது. இதே போன்று மற்றொரு பாடலில் வில்லவன் விழா என்றும் கொண்டாடினர்;

அவ்விழாவின் போது பரத்தையருடன் ஆண்கள் மகிழ்ச்சியுடன் விளையாடினர் என்பதை

> "மல்கிய துருத்தியுள்ள மகிழ்துணைப் புணர்ந்தவர்
> வில்லவன் விழாவினுள் விளையாடும் பொழுதன்றோ".[59]

கலித்தொகை பாடல் ஒன்று கூறுகிறது.

மேற்கூறிய கருத்திலிருந்து காமன் விழாவை உயர்ந்தவன் விழா, வில்லவன் விழா, முதலிய பெயர் களில் கொண்டாடியதையும், அவ்விழா இளவேனிற் காலத்தில் நடைபெற்றது என்பதையும், அப்போது ஆண்கள் பரத்தையர்களுடன் இன்பமாக விளை யாடினர் என்பதையும் அறியலாம்.

## ஓண விழா

ஓண விழா கேரளத்தில் இப்பொழுது மிகச் சிறப் பாகக் கொண்டாடப்படுகிறது. இவ்வோண விழா இன்றைய தமிழக வழக்கில் இல்லை. எனினும் பண்டைய தமிழகத்தில் கொண்டாடினர் என்று சங்க இலக்கியமான மதுரைக் காஞ்சியில் காணப்படுகின்றது.

ஓண விழா திருமாலின் நினைவாக கொண்டாடும் ஒரு விழாவாகும். திருமால் திருவோணம் நாளில் உலகில் பிறந்தார் என்பதைப் பெரியாழ்வார்

> "நின்ற மராமரம் ஏழும் சாயதீ யோய் நீ பிறந்த
> திருவோணம்".[60]

என்று கூறுகிறார். அடுத்து

> "கணங்கொ ளவுணர்க் கடந்த பொயந்தார்
> மாயோன் மேய ஓண நன்னாள்"[61]

என்று மதுரைக்காஞ்சியும் திருமால் ஓண நன்னாளில் பிறந்தார் எனக்கூறுகிறது. திருமால் பிறந்த இந்த 'திருவோண நாளை' ஓண விழாவாக மக்கள் கொண் டாடுகின்றனர். தமிழ்நாட்டில் "இன்று ஆவணி அவிட்டம் எனச்சுட்டப்படும் ஒன்றே பண்டு ஓண

நாளாகக் கருதப்பட்டதனை மு. இராகவையங்கார் காட்டிச் செல்கின்றார்".[2]

கேரள நாட்டில் ஓண விழா சிறப்பாகக் கொண் டாடுவதற்குரிய காரணம், "திருமால் வாமனனாய், மாபலிச் சக்கரவர்த்தியிடம் வந்து மூவடி மண்கேட்டு, இரண்டடியால் நிலத்தையும், வானத்தையும் அளந்து மூன்றாவது அடியால் மாபலி சக்கரவர்த்தியின் தலை மீதுவைத்துப் பாதாளத்துள் வீழ்த்தியப் போது திரு மாலை நோக்கி, தான் ஆட்சி செலுத்திய நாட்டை ஆண்டுக்கொருமுறை வந்து காணவேண்டும் என வரம் கேட்டுப் பெற்றான். திருமால் வந்து காணும் நாளே இந்த ஓண நாளாகும்".[3]

ஓண விழா ஏழுநாட்கள் நடைபெற்றன; இறுதி நாளன்று புண்ணியத் தீர்த்தத்தில் நீராடுவர், என்பதைக் "கழுநீர் கொண்ட ஏழுநாள் அந்தி"[4] என்ற தொடரின் மூலம் அறியலாம். அந்நாளில் மக்கள் பல வகையான காய் வகைகளையும் பழவகை களையும் கிழங்குவகைகளையும் ஊன் உணவினை யும் உண்டு மகிழ்ந்தனர். இந்நாளில் சேரிப்போர் நிகழ்ந்தன என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது.[5]

"ஓண விழா சேரநாட்டில் விமரிசையாய் நடக்கும் திருமாலுக்குரிய ஒரு திருநாள்"[6] என்று மதுரைத் தமிழ்ப் பேரகராதி கூறுகிறது. பண்டை சேரநாடே இன்றைய கேரளம். இதனால் இவ்விழாவை கேரளத் தில் கொண்டாடுகின்றனர். சேரநாடு தனியாகப் பிரிந்து விட்டதால் இன்றைய தமிழர்கள் இவ்விழாவைக் கொண்டாடுவது இல்லை என்பதை உணரலாம்.

இதன் மூலம் பண்டைய தமிழகத்தில் திருமால் பிறந்த நாளில் ஓண விழா கொண்டாடினர், என்று அறியலாம். அந்நாளில் பல வகை உணவுகளை உண்டு, சேரிப்போர் நடத்திக் கொண்டாடினர், என்றும் உணரலாம்.

### பிற விழாக்கள்

முருகன் விழா, ஓண விழா முதலிய விழாக்களே அன்றி சில விழாக்கள் இரண்டு, மூன்று தெய்வங் களுக்குக் கூட்டாக எடுக்கப்பட்டது என்ற குறிப்பும் உண்டு. இவைகளைப் பற்றி ஆய்வோம்.

உலகினை உண்டாக்கிய சிவபெருமானுக்கும், வாடாத பூக்களையும் இமையாத கண்ணினை உடைய மாயோன் முருகன் முதலிய தெய்வங்கட்குப் பலி கொடுத்தற் பொருட்டு அந்திக் காலத்து விழா எடுத்தனர் என்பதைப் பின்வரும் பாடல் உணர்த்து கிறது.

> நீரு நிலனுந் தீயும் வளியும்
> மாக விசும்போ டைந்துட னியற்றிய
> முழுவா ணொடியோன் றலைவ னாக
> மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
> வாடாப் பூவின் இமையா நாட்டத்து
> நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு
> மாற்றரு மரபி னுயர்பலி கொடுமார்
> அந்தி விழவிற் றூரியங் கறங்கத்''[61]

விழாவின் ஏழாவது நாள் சிறந்ததாகக் கருதப்பட்டது. அந்நாளில் அந்தியில் தீர்த்தமாடிச் சிறப்பாகக் கொண் டாடினர்.[62]

காவிரிப்பூம்பட்டினத்தில் முருகனுக்கும், பிற கடவுளருக்கும் கோயில்கள் இருந்தன; அங்கு குழல் இசையை உண்டாக்க, யாழ் வாசிக்க, முழவு முழங்க, முரசு ஒலிக்க, பாடு மகளிர் பாடத் திருவிழா நடை பெற்றது; நகரமக்கள் விழாவில் கலந்து கொண் டார்கள்.[63]

### புனலாட்டு விழா

புனலாட்டு விழா என்பது மக்கள் ஒன்று கூடி நீரில் குளித்துக் கொண்டாடும் ஒரு விழாவாகும். இவ் விழா பண்டைய காலத்தில் சிறப்பாக நடைபெற்றது.

மக்கள் புனலாடுவதன் மூலம் தங்கள் பாவங்கள் நீங்கும் என நம்பி ஆற்றிலும், கடலிலும் நீராடினர்.

புனலாட்டு விழாவை 'தீநீர் விழா'[10] என்ற பெயரில் ஆற்று நீரில் நிகழ்ந்தமை பதிற்றுப்பத்தில் காணப் படுகிறது. தீவினைப் போக கடலில் நீராடியும் கடலாடியதனால் உண்டான உப்பு நீங்க ஆற்றில் நீராடியதையும் பட்டினப்பாலை

> "தேறுநீர்ப் புணரியோ டியாறுதலை மணக்கும்
> மலியோதத் தொலிகூடல்
> தீதுநீங்கக் கடலாடியும்
> மாசுபோகப் புனல்படிந்தும்"[11]

என்று கூறுகிறது.

## புதுப்புனல் விழா

புனலாடுதல் என்பது மக்கள் எண்ணும்போது நீராடலாம். ஆனால் புதுப்புனல் விழா அவ்வாறு இன்றி, மழை பெய்து ஆற்றில் புதுநீர் பொங்கிவரும் போது அதைக் கண்டு மகிழ்ந்த உழவர்களும், பிறரும் மகிழ்ச்சியில் திளைத்துப் புதுநீரில் விளையாடுவது 'புதுப்புனல் விழா' எனப்படும்.

கார்காலத்தில் மழைபெய்து புதுநீர் வருவதைக் கண்ட மக்கள் மகிழ்ச்சியினால் அந்நீரில் சங்கு, நண்டு, பொன்மீன், புதுமலர், அன்னம் முதலிய மங்கலப் பொருள்களை இட்டு, விளையாடி, நீராடிக் கொண் டாடியதைப் பரிபாடல்[12] வாயிலாக அறியலாம். பண்டு திருமாவளவனாகிய கரிகாலன் காலத்தில் காவிரியில் ஆடித் திங்கள் பதினெட்டாம் நாளில் இவ்விழாச் சிறப்புற நிகழ்ந்தது.[13] இதே போன்று இன்றும் ஆடி மாதம் பதினெட்டாம் பெருக்கென மக்கள் அவ்விழா வினைச் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர் என்பதைக் காணலாம்.

மேற்கூறிய செய்தியிலிருந்து பண்டை தமிழ் மக்கள் புனலாடுதலை ஒரு விழாவாகக் கொண்

டாடினர் என்பதையும் அறியலாம். அதன் தொடர்ச்சி யாக இன்றும் ஆடிப்பெருக்கு என கொண்டாடுவதை அறியலாம்.

## பூந்தொடை விழா

பூந்தொடை விழா சங்க காலத்தில் கொண்டாடி வந்த ஒரு விழாவாகும். அவ்விழா இன்றைய வழக்கில் இல்லாமல் போயினும் இலக்கியத்தின் வாயிலாகச் சங்க காலத்தில் கொண்டாடி வந்ததை அறியலாம்.

பூந்தொடை விழா சங்க இலக்கியங்களில் அக நானூற்றில் ஒரு பாடலில்[11] மட்டுமே காணப்படுகிறது. பூந்தொடை விழா என்பதற்குப் "படைப்பயிற்சி பெற்ற இளைஞர் அரங்கேற்றும் விழா"[15] என்று மதுரைத் தமிழ்ப்பேரகராதி பொருள் கூறுகிறது.

பூந்தொடை என்பதற்குக் "கூரிய பாணம்"[16] என்று பொருள். அத்தகைய பாணங்களைக் கொண்டு முறையே பயிற்சிப் பெற்று அரங்கேற்றும் போது அதற்கு விழா எடுத்தமையால் அதைப் பூந்தொடை விழா என்று கூறுவர். பூந்தொடை விழா என்பதற்கு உரையாசிரியர் "மறவர் மக்கள் முதல் முதலாக அம்பு தொடுத்தற் பொருட்டு நிகழ்த்தும் திருவிழா"[17] என விளக்கியுள்ளார். உரையாசிரியரின் கருத்துப்படி இது ஓர் பயிற்சியின் அரங்கேற்ற விழாவாகவே கருதத் தக்கது. அவ்விழாவைப் பல நாட்கள் கொண்டாடினர்; தலைநாள் அன்று நகர் முற்றத்தில் புதுமணல் பரப்பிக் கொண்டாடினர் என்பதை

> "வார்கழற் பொலிந்த வன்கண் மழவர்
> பூந்தொடை விழவின் தலைநா ளன்ன
> தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம்"[18]

இப்பாடல் விளக்குகிறது.

சங்ககாலத்தில் கொண்டாடிய பூந்தொடை விழா, இன்று வழக்கில் இன்றி மறைந்து விட்டது. காரணம்

இன்றைய நாட்களில் வில் அம்பு பயிற்சியை யாரும் பயிலுவது இல்லை. எனவே இவ்விழா தற்காலத்தில் கொண்டாடப் பெறவில்லை என்று கூறலாம்.

## உள்ளி விழா

உள்ளி விழா சங்ககாலத்தில் கொண்டாடிய ஒரு விழாவாகும். இவ்விழா இன்று வழக்கில் இல்லை. "உள்ளி விழா பண்டைக் காலத்தில் சேரர் இராச தானியாகிய கருவூரில் நிகழ்ந்த திருவிழா"[79] என்று மதுரை பேரகராதி கூறுகிறது.

உள்ளி விழாவைப் பற்றி அகநானூற்றில் ஒரு குறிப்பு வருகிறது. எனினும் அவ்விழா எதற்காகக் கொண்டாடினர் என்பதற்கு எவ்விதக் குறிப்பும் காணப்படவில்லை. உள்ளி விழாவில் கொங்கு நாட்டினர் இடையில் மணியைக் கட்டிக்கொண்டு ஆரவாரத்துடன் தெருவில் கூத்தாடினர்.[80] என்ற குறிப்பு மட்டும் வருகிறது.

உள்ளி விழா சேரன் தலைநகராகிய வஞ்சியில் நடைபெற்றது என்பதற்கு நற்றிணையில்

> ''பங்குனி விழவின் உறந்தை யோடு
> உள்ள விழவின் வஞ்சி''[81]

என்ற் குறிப்பு காணப்படுகிறது.

'மதுரையில் நடைபெறும் ஆவணி அவிட்டம், உறையூரில் நடைபெறும் பங்குனி உத்திரம் போன்று கருவூரில் உள்ளிவிழா நடைபெற்றது' என்று இறை யனாரகப் பொருள்[82] கூறுகிறது.

இவற்றை நோக்கும் போது உள்ளிவிழா சேர நாட்டில் மட்டுமே கொண்டாடினர் என்பதும் அப்போது கொங்கு நாட்டவர் மணியைக் கட்டிக் கொண்டு ஆடினர் என்பதும் தெரிய வருகிறது.

### பிறந்தநாள் விழா

பண்டைய தமிழகத்தில் மக்கள் தாம் பிறந்த நாளைக் கொண்டாடி இருப்பினும் மன்னர் பிறந்த நாளை மட்டுமே சங்க காலத்தில் விழாவாகக் கொண் டாடியதை அக்கால இலக்கியம் மூலம் அறியலாம்.

பிறந்தநாளைப் பற்றி தொல்காப்பியர்

"சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப்
பிறந்த நால்வயின் பெருமங் கலமும்"[3]

இவ்வாறு 'பெருமங்கலம்' என்று கூறுகிறார். இதன் மூலம் பிறந்தநாள் ஒரு புண்ணியமான நாள் என்பதை அறியலாம். எனவே இந்நாளைக் கொண்டாடினர்.

மதுரைக்காஞ்சியில் நன்னனுடைய பிறந்தநாளில் சேரிமக்கள் பாட்டுக்களோடு பல வகைக் கூத்துகள் நிகழ்த்தி மிக்க ஆரவாரத்துடன் கொண்டாடினர் என்ற குறிப்பு வருகின்றது. மாங்குடி மருதனார் பிறந்த நாளைப் 'பெறும் பெயர் நன்னாள்' என் அழைத்தமை கீழ்வரும் பாடல் வாயிலாகப் புலப்படுகிறது.

"மன்றுதொறும் நின்ற குரவை சேரிதொறும்
உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ
வேறுவேறு கம்பலை வெளிகொள்பு மயங்கிப்
பேரிசை நன்னன் பெறும்பெயர் நன்னாள்
சேரி விழவின் ஆர்ப்பெழுந் தாங்கு".[4]

இவற்றிலிருந்து சங்ககாலத்தில் மன்னன் பிறந்த நாளைக் கொண்டாடும் வழக்கம் இருந்தது என்பதும் அவ்விழாவை அவனது குடிமக்கள் கொண்டாடினர் என்பதும் நன்கு புலப்படுகிறது.

### முடிவுகள்

சங்க காலத்தில் விழாவை விழவு, சாறு என்று அழைத்தனர். இவை ஒரு பொருள் குறித்த பலசொல் ஆகும்.

விழா தொடங்குவதற்கு முன் கால்கோள் செய்தும் கொடியேற்றியும் விழா தொடங்கினர். குயவன் மூலம் பறையறைவித்தும் விழாப்பற்றிய செய்திகளை மக்களுக்குத் தெரிவித்தனர்.

விழாக்கள் மூதூரில் நடைபெற்றன. அந்நாட்களில் புதுமணல் பரப்பினர். விழாவைக் காண பல ஊர்களி லிருந்து மக்கள் வந்தனர்.

விழாக்காலங்களில் இசைக்கருவிகள் ஓயாமல் ஒலித்தன. ஆணும், பெண்ணும் தனித்தும், சேர்ந்தும், பலவகையான கூத்துகள் ஆடினர். விழாவைக் காணச் சென்ற மக்கள் பல வகையில் அலங்கரித்துச் சென்றனர்.

முருகன் வழிபாடு பழங்காலத்திலுருந்து தமிழரிடம் இருந்து வருகிறது. தொல்காப்பியர் காலத்தில் நானிலத்துள் குறிஞ்சி நில கடவுளாக முருகன் விளங்கி னான்.

கார்த்திகை விழா கார்த்திகை மாதத்தில், மக்கள் கார்த்திகை நட்சத்திரமும் பூரண திதியும் ஒன்றாகக் கூடும் நாளில் கொண்டாடினர். இவ்விழாவைப் பெரு விழா, கார்த்திகை சாறு எனவும் அழைத்தனர். இரவு காலங்களில் அகல்களில் நெய் ஊற்றி ஏற்றிக் கொண் டாடினர்.

இந்திரன் மருத நிலத்தின் தெய்வம். இந்திர விழாவை மருதமக்கள் கொண்டாடினர். இந்திர விழாவில் மலர்களை மிகுதியாகப் பயன்படுத்தினர்.

காமன் மக்களுக்குக் காமத்தைக் கொடுக்கக் கூடியவன். பெண்களே காமனை வழிப்பட்டனர். காமன்விழா இளவேனில் காலத்தில் நடைபெற்றது. காமன் விழாவின் போது ஆண்கள் பரத்தையர்களுடன் இன்பமாக விளையாடினர்.

திருமால் பிறந்த நாளில் ஓண விழா கொண்டாடினர். அவ்விழாவின் போது சேரிப்போர் நிகழ்ந்தன. இவ்விழா இன்று தமிழகத்தில் இல்லை.

மக்கள் தங்கள் பாவங்கள் போக கடலிலும் ஆறுகளிலும் நீராடிக்கொண்டாடினர். புதுப்புனல் விழாவில் ஆற்றில் பொன்னால் செய்த நண்டு, மீன், புதுமலர் முதலிய மங்கலப் பொருள்களைப் போட்டுக் கொண்டாடினர்.

மறவர் அம்பு பயிற்சிப் பெற்ற பின் நடைபெறும் அரங்கேற்றமே பூந்தொடை விழா எனப்படும்.

உள்ளி விழா சேர நாட்டில் கொண்டாடும் ஒரு விழாவாகும். அப்போது கொங்கு நாட்டவர் இடையில் மணியைக் கட்டிக்கொண்டு ஆடினர்.

பிறந்த நாள் விழா தொல்காப்பியர் காலத்திலிருந்து வருகிறது. மதுரைக்காஞ்சியில் நன்னனுடைய பிறந்த நாளை மக்கள் கொண்டாடினர்.

## குறிப்பெண் விளக்கம்

1. அக. 115:1.
2. பெரு 411.
3. புற. 22:16.
4. பெரு. 411.
5. அக. 185:11.
6. கலி. 83:14-15.
7. மது. 366.
8. நற். 200: 3-4.
9. மது. 361-362.
10. பரி. 11:76.
11. பெரு 421-422.

12. அக. 187: 7-9.
13. பெரு. 1-2.
14. குறி. 201-203.
15. பட். 252-255.
16. நற். 220: 1-2.
17. அக. 239: 9-11, நற். 50: 2-3.
18. அக. 239: 9-11.
19. குறு. 31: 1-2, மது. 96-98.
20. அக. 320: 4-5.
21. அக. 385: 3-8.
22. அக. 189: 1-6.
23. அக. 222: 4-8.
24. அக. 17: 17-22.
25. 176: 14-65.
26. அக. 326: 5-8.
27. குறு. 295: 1-3.
28. குறு. பா. 1.
29. புறம். 23: 3-4, அகம், 149: 14-15.
30. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 582-583.
31. K.A.N. Sastry, *A History of South India*, P. 55. (இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 580.)
32. தொல். பொருள். நூ. 5.
33. சி. பாலசுப்பிரமணி, 'வெறியாட்டு', இலக்கியக் காட்சிகள், ப. 40.
34. திருமுருகு. 215-217.
35. கலி. 83: 14-15.
36. சிலம்பு. 23: 135.
37. பரி. 11:2, பரிமேலழகர் உரை.
38. கலைக்களஞ்சியம், ப. 521.

39. தேவாரம் இரண்டாம் திருமுறை 37:4.
40. அக. 185: 9-11.
41. கள. 17:3.
42. அக. 141: 6-11.
43. அக 17: 17-22.
44. அக. 185: 9-13.
45. திருமுருகு. 155-159.
46. பரி. 19:50-53, திருமுரு. 156-160.
47. ஐங். 62: 1-2.
48. பதிற். 30:15.
49. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, பதிற்றுப்பத்து மூலமும் விளக்க உரையும், ப. 126.
50. தொல். பொருள். நூ. 5.
51. மண்டல புருடர், சூடாமணி, நூ. 25.
52. கலி. 27:24
53. கலி. 30:12
54. கலி. 35:14.
55. சிலம்பு. 11: 1-2.
56. கலி. 109.
57. கலி. 36: 8-9.
58. கலி. 30:12-14.
59. கலி. 35:13-14.
60. பெரியாழ்வார், நாலாயிரம், திவ்வியபிரபந்தம், 2: 4:2.
61. மது. 590-591.
62. க. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 70.
63. அ. மு. பரமசிவானந்தம், தமிழ் நாட்டு விழாக்கள், ப. 52.
64. மது. 427.
65. மது. 527-535, மது. 594-596.
66. மதுரைத் தமிழ்ப்பேரகராதி, ப. 451.

67. மது. 453–455.
68. மது. 427.
69. பட். 145–148.
70. பதிற். 48:14-17.
71. பட். 97–100.
72. பரி. 10:84–86.
73. மதுரைத் தமிழ்ப்பேரகராதி (இரண்டாம் பாகம்) ப.
74. அக. 187: 5-9.
75. மதுரைத் தமிழ்ப் பேரகராதி (இரண்டாம் பாகம்), ப. 280.
76. மதுரைத் தமிழ்ப் பேரகராதி (இரண்டாம் பாகம்), ப. 280.
77. பெருமழைப் புலவர் உரை, அகநானூறு மணிமிடை பவளம், நித்தலக் கோவை), ப. 224.
78. அக. 187: 7-9.
99. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, (முதல்பாகம்), ப. 359.
80. அக. 368: 16-18.
81. நற். 234: 8-9.
82. இறை. சூ. 16, (விளக்கம்).
83. தொல். பொருள். நூ. 88:7–8.
84. மது. 615–619.

# இயல்-3

## சிலம்பில் சமய விழாக்கள்

கலை நோக்குடைய சங்கத்தமிழ் மக்களினும், சிலப் பதிகாரத் தமிழ் மக்களிடம் சமயப்பற்று அதிகமாகக் காணப்படுகிறது எனலாம். சமயத்தைப் பரப்புவதற்கு என்றே சில பாத்திரங்களை படைத்தும், பல விழாக் களை உருவாக்கியும் சிலப்பதிகாரத்தைபடைத்துள்ளார் இளங்கோவடிகள். சிலப்பதிகாரக் காலத்தில் மக்கள் கொண்டாடிய சமய விழாக்கள் யாவை, அவ்விழாக் களை எம்முறையில் கொண்டாடினர் என்பதை ஆய்வதே இதன் நோக்கமாகும்.

### இந்திர விழா

இந்திரனைப் பற்றி, இந்திர விழா கொண்டாட கராணம், அவ்விழாவின் போது நடைப்பெற்ற பிற விழாக்கள், கலை நிகழ்ச்சி குறித்து இங்கு ஆய்வு செய்யப்பெறுகின்றன.

### இந்திரன்

இந்திரன் தேவர்களின் தலைவன் ஆவான். வேத கால கடவுளருள் இந்திரன் சிறந்து விளங்கினான். "ரிக்வேதத்தில் நான்கில் ஒரு பகுதிப் பாடல்கள் (சுமார் 250 பாடல்கள்) இந்திரனைப் புகழ்ந்து பாடப்பட்டுள் ளன"[1]. வேதகாலத்தில் சிறந்து விளங்கிய இந்திரன் பண்டை தமிழகத்தில் நான்கு வகை நிலங்களில் ஒன்றான மருத நிலத்தின் தெய்வமாக விளங்கினான் என்பதைத் தொல்காப்பியத்தில்

"வேந்தன் மேய தீம்புனல் உலகமும்"[2]

என்று விளக்கப்பட்டுள்ளது. வேந்தன் என்னும் சொல்லுக்கு இந்திரன் என்று உரையாசிரியர்கள் பொருள் கூறுகின்றனர்[3].

தமிழகத்துக்கு வந்த வைதிகச் சமயத்தினரும், சமண, பௌத்த சமயத்தினரும் தங்களுடைய தெய்வ மான இந்திரனைத் தமிழருடைய 'வேந்தன்' என்னும் தெய்வத்தோடு இணைத்து இரண்டு தெய்வங்களையும் ஒன்றாகச் செய்து விட்டனர்,' என்று ஒரு கருத்து இருப் பினும், உரையாசிரியர்களின் கூற்றுப்படி 'வேந்தன்' என்னும் சொல்லுக்கு இந்திரன் என்ற பொருளே பொருத்தம் ஆகும். இந்திரன் மேகங்களின் தலைவன். எனவே, உழவுத் தொழில் செய்யும் மருத நில மக்கள் இந்திரனை வணங்குவது பொருத்தமாகும். மேலும் 'வேந்தன்' என்பவன் விண்ணுலக வேந்தன் (அரசன்) என்று பொருள் கொள்ளின் 'வேந்தன்' என்பவன் இந்திரன் என்பதை அறியலாம்.

இந்திரன் அதிதிதேவிக்கும், காசிபமுனிவருக்கும் மைந்தனாகப் பிறந்தவன் என்று அபிதான சிந்தாமணி கூறுகிறது[5]. 'சில கதைகளில் இந்திரன் டியஷெஸ் (Dyous) பிரித்திவி (Prithivi) என்பவருடைய மகன் ஆவான் என்றும், வேறு சில கதைகளில் அக்கினியுடன் இரட்டைப் பிறப்பில் கீழ்த்திசையில் பிறந்தவன் என்று இந்து உலகம் என்ற ஆங்கிலக் கலைக்களஞ்சியம் கூறுகிறது'[6].

"இந்திரன் நூறு அஸ்வமேதயாகஞ் செய்து இந்திர பதம் அடைந்ததால்"[7] எல்லாச் சிறப்பையும் பெற்றுச் சிறப்பாக இந்திர உலகத்தை ஆண்டு வந்தான் என்று சான்றோர் கூறுவர்.

இந்திரன் மனைவி இந்திராணி[8], மகன் சயந்தன்[9] ஆவான்.

## இந்திரன் வேறு பெயர்கள்

இந்திரனுக்குப் பல பெயர்கள் உண்டு. அவை யாவும் அவன் தோற்றத்தையும், தொழிலையும் விளக்குவனவாய் விளங்குகின்றன. அவைகள் பின் வருமாறு:

'அர்றெ (சிறப்பு பெறுபவன்); டேடயேயா (அளிப் பவன்); தேவ-பட்டி (கடவுளின் தலைவன்); தேவேந் திர (இந்திர உலகக் கடவுள்); தேவாஸ்-பட்டி (சூழ் நிலைத் தலைவன்); ஜம்பாபேடின் (ஜம்பாவை கொன்றவன்); ஜிஷ்ணு (வெற்றித் தலைவன்); மகேந் திர (சிறந்த இந்திரன்); மருட்-வான் (காற்றுக் கடவுள்); மேகவாகன் (மேகத் தேர் உடையவன்); நெடறாயோ னியோன் (யோனி கண்ணுடையவன்; கௌதம முனி வரின் சாபத்தால் வந்தது); புறம்தரன் (நகரத்தை அழிப் பவன்); ரிபுக்ஷன் (ரிபுக்ஷன் என்பவருள் முதல்வன்); சஹஸ்ரக்ஷ (ஆயிரம் கண்கள் உடையவன்); சக்ரா (வலியோன்); சாதகிரது (நூறு சிறப்புடையவன்); சா-யோனியன் (யோனினுடன் கூடியவன்);சுர நாயகன் (கடவுளரின் தலைவன்); சூல்ராமன் (பாதுகாப்பாளன்); சுவரகபதி (சொர்க்கத்தின் கடவுள்); உக்கிரதன்வன் (கொடுமையான வில்லுக்குரியவன்); வச்சிரபணி (இடியை படையாகக் கரத்தில் உடையவன்); வலிபிட் (வல கொல்பவன்); வசவ்யா (செல்வத்திற்கு அதிபதி); விரித்திரஹேன் (விரித்திர கொல்பவன்);'' என்று பல பெயர்களால் அழைக்கப்பெறுகிறான். பிங்கலத்தை என்னும் நிகண்டு'' இந்திரனை அமராவதியோன், ஆயிரங் கண்ணன், சதமகன், கோபதி, போகிசங்கிரந் தனன், பாகசாதனன், வச்சிரப்படையோன், மேக வாகனன், விண்முழுதாளி, வாசவன், மகவான், வானவன், கௌசிகன், ஆகண்டலன், ஆயிராவதன், வலாரி, புருகூதன், சக்கிரன், புரந்தரன், மருதக்கிழவன், வரைசிறகரிந்தோன், அரி, சசிவல்லவன், திருமலி சுவர்க்கன், வேள்வி நாயகன், புலவன், வேந்தன்,

புரோகிதன், அனாகி, கரியவன், புதன் காண்டா வனன், மால், வெள்ளைவாரணன், தேவர்வேந்தன், பொன்னகர்ச் செல்வன், ஐந்தருநாதன், என்று வேறு பெயர்கள் இருப்பதாகக் கூறுகிறது.

சிலம்பில் இந்திரனைக் குறிக்கும் பெயர்கள் அமரர்க்கரசன்,[12] அமரர் கோமான்,[13] அமரர் தலைவன்,[14] ஆயிரங் கண்ணோன்,[15] தேவர்கோன்,[16] விண்ணவர் கோமான்-கோன்,[17] விசும்பிற் கோமான்,[18] வானவன்,[19] செங்கண் ஆயிரத்தோன்,[20] விண்ணவர் தலைவன்,[21] மன்னவன்,[22] இந்திரன்,[23] என்று பல பெயர்களில் அழைக்கின்றனர் இளங்கோவடிகள்.

மேற்கண்ட பல பெயர்களால் இந்திரன் அழைக்கப் பெற்றாலும், தேவேந்திரன், வேந்தன், போகி, மேக வாகனன், ஆயிரங்கண்ணன், மருதக்கிழவன், விண்ணவன், இந்திரன், முதலிய பெயர்களே மக்கள் வழக்கிலுள்ள பெயர்களாகும்.

### இந்திரன் படை

இந்திரன் தேவர் உலகத்தின் அரசன், எனவே அவனுக்குரிய படைகள், படைக்கருவிகள் சில இருந்தன. இந்திரனுக்கு வாகனம் ஐராவதமென்னும் யானையும், உச்சைச் சிரவம் என்னும் வெள்ளைக் குதிரையுமாகும். இரதம்-வியோமயானம், சாரதி-மாதவி ஆவாள். அவனுடைய படை வச்சிரம்; கொடி இடியாகும். இந்திரன் அணிவன சிந்தாமணி, சூளா மணி, முதலியன. புனைவது கற்பக மலராகும். அருந்தும் பானம் அமிர்தாகும். அவனது செல்வம் கற்பகத்தரு ஆகும். இந்திரன் சபை சுதர்மை; அவனுடைய சபையில் தேவதைத்தியர், அச்வதி தேவர், கன்வந்தரி, அரம்பையர், ஊர்வசி, திலோத் தமை, முதலியோர் இருந்தனர்[24] என்பதை அறியலாம்.

சிலம்பு இந்திரன் படைகளாகச் சில வற்றைக் கூறு கின்றன. அவைகள், வச்சிரயத்தையும்,[25] இடியையும்[26]

தனக்குப் படையாக உடையவன். அயிராவதம் என்னும் யானையை வாகனமாகவும்[11] கற்பகத்தரு செல்வமாக உடையவன்[14] என்று கூறுகிறது.

## சிலம்பில் இந்திர விழா

பௌத்த சமண சமயங்கள் மேன்மையுற்று விளங்கிய சங்கம் மருவிய கால நூல்களான சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவற்றில் இந்திர விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டதைத் தெளிவாக அறியலாம். ஈண்டுச் சிலப்பதிகாரத்தில் இந்திர விழாப் பற்றி அறியப் பெறுகிறது. சிலம்பில் இவ்விழாவுக்கு 'இந்திர விழா வூரெடுத்த காதை' என ஒரு காதையையே இளங்கோ வடிகள் அமைத்துள்ளார். இவ்விழா புகார் நகரில் பெரு விழாவாகக் கொண்டாடப்பட்டது. "இந்திர விழாவில் பல சமயத்தினர் பங்கு பெறுவதால் இவ்விழா ஒரு குறிப்பிட்ட சமய விழா எனச் சிலம்பில் சுட்டப்பட வில்லை எனலாம்".[9] ஆகவே இவ்விழாவை சோழ நாட்டில் நிகழ்ந்த பொதுவிழா என்றே கூறலாம்.

## இந்திர விழா கொண்டாடக் காரணம்

தேவர்களுக்கும், தானவர்களுக்கும் நடைப்பெற்ற போரில் சோழனது முன்னோர்கள் இந்திரனுக்குப் படைகளை அளித்து உதவ, இந்திரன் வெற்றிப் பெற்றான். அதற்குப் பரிசாக இந்திரன் பூதத்தையும், ஐவகை மன்றங்களையும் கொடுத்தான்.[10] சோழர் வேண்டுகோளுக்கு இணங்க வருடத்திற்கு ஒருமுறை சோழர்கள் நாட்டுக்கு வருவதாக வரம் அளித்தான். அந்நாள் கொண்டாட்டமே இந்திர விழாவாகும்.[11]

இந்திர விழா செய்யாது விட்டால் பூதங்கள் தீமை செய்யும் என்றும், நெடுமுடிக்கிள்ளி என்னும் சோழ மன்னன் இந்திர விழா செய்யாததால் காவிரிப்பூம் பட்டினம் கடல் கொள்ளப்பட்டது என்றும் மணிமேகலை கூறுகிறது.[12]

மேற்கூறிய காரணங்களால் இந்திரவிழா சோழ நாட்டில் புகாரில் ஆண்டுதோறும் கொண்டாடப் பட்டது.

## கொடி யேற்றம்

விழா தொடங்குகிறது என்பதை மக்களுக்கு முன் கூட்டியே அறிவிப்பதற்காகக் கொடியேற்றுதல் மரபு. அதேபோன்று இந்திர விழாவின் போது வச்சிரக் கோட்டத்திலிருந்து முரசை கச்சணிந்த யானையின் பிடரியின் மேல் ஏற்றி ஐராவதம் நிற்கும் கோட்டத் திற்குக் கொண்டு சென்று விழாவின் தொடக்கம், முடிவு பற்றிய விவரங்களை முரசறைந்து பின்பு தரு நிலைக் கோட்டத்தில் கொடி வானளாவப் பறக்குமாறு ஏற்றப்பட்டது என்பதை

"வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசங்
கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி
வால்வெண் களிற்றரசு வயங்கிய கோட்டத்துக்
கால்கோள் விழவின் கடைநிலை சாற்றித்
தங்கிய கொள்கைத் தருநிலைக் கோட்டத்து
மங்கல நெடுங்கொடி வானுற எடுத்து".[13]

என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

## பூத வழிபாடு

இந்திர விழாவின் போது இந்திரனால் அனுப்பப் பட்ட பூதத்திற்கு வழிபாடு செய்து கொண்டாடினர்.

மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக்கம் என்னும் இவ் விரு பாக்கங்களுக்கும் இடையேவுள்ள நாளங்காடியில் இந்திரனால் அனுப்பப்பட்ட காவற்பூதத்திற்கு சதுக்கம் இருந்தது.[14] அவ்விடத்தில் சித்திரை மாதத்தில் 'சித்திரா பௌர்ணமி' நாளிலே மறவர்கள் பூ, புகை, பொங்கல், புழுங்கல், எள்ளுருண்டை, நிணச்சோறு படைத்து துணங்கைக் கூத்தும், குரவைக் கூத்தும் ஆடியவராக

"வெற்றிவேல் மன்னற் குற்றதை ஒழிக்கெனத்"[15]

என்றும்

"பசியும் பிணியும் பகையும் நீக்கி
வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி"[16]

எனவும் வழிப்பட்டனர்.

அப்போது மறவீரர் பூதத்திற்குப் பலியிட்டோர் வலிமைக்கு எல்லையாகக் கடவர் என்று கூறிக் கொண்டு பலிபீடிகை முன் நரப்பலி கொடுத்து பூதத்தை வழிபட்டனர்.[17]

## மண்டபங்களில் வழிபாடு

கரிகாலன் வடநாடு சென்று இமயத்தில் கொடி நட்டு நாடு திரும்புகையில் தனக்குத் திறையாகக் கொடுத்த முத்துப் பந்தல், வித்தியா மண்டபம், மற்றும் தோரண வாயில் ஆகிய அம்மூன்றையும் ஒன்றாக இணைத்த சித்திர மண்டபத்தில் மக்கள் கொண்டாடி பலிகளை இட்டு வழிப்பட்டனர்.[18]

## ஐவகை மன்றங்களில் வழிபாடு

தெய்வ மன்றம், இலஞ்சி மன்றம், நெடிய ஒளிக்கல் நின்ற மன்றம், பூத சதுக்க மன்றம், பாவை மன்றம், ஆகிய ஐவகை மன்றங்களிலும்[19] பலி கொடுத்து மக்கள் பலரும் வழிபட்டனர்.

இவ்வகை மன்றங்கள் சங்ககாலத்தில் இருந்ததாக தெரியவில்லை. சிலம்பிலே இத்தகைய மன்றங்கள் இருந்ததை அறியலாம்.

## கோட்டங்களில் வழிபாடு

இந்திரனுக்கு வச்சிரப்படை, ஐராவத வாகனம் முதலியன இருந்தன. அவைகளுக்கு என தனித் தனியே கோட்டங்கள் இருந்தன. அவைகள் முறையே:

## வச்சிரக் கோட்டம்

இந்திரன் வச்சிராயுதம், ததீசி என்ற முனிவரின் முதுகெலும்பாகும். அதனை அம்முனிவரே

இந்திரனுக்கு கொடுத்தார்.[10] இவ்வச்சிராயுதத்திற்கு 'வச்சிரக் கோட்டம்'[11] என ஒரு கோட்டம் இருந்தது. இந்திர விழாவின் போது இங்கும் விழா நடைபெற்றது.

### வயங்கியக் கோட்டம்

இந்திரனுடைய வாகனம் ஐராவதமெனும் வெள்ளை யானையாகும். இவ்ஐராவதத்திற்கு எனத் தனியாகக் கோட்டங்கள் இருந்தன. அவை 'வெள்ளை யானைக் கோட்டம்' , 'வயங்கியக் கோட்டம்'[12] ஆகும். இங்கிருந்து தொடங்கிய இந்திர விழாவின் தொடக்க முதல் இறுதி வரைப் பற்றிய செய்திகளை மக்களுக்கு அறிவித்தனர்.

### தருநிலைக் கோட்டம்

இந்திரன் செல்வமான கற்பகத் தருவுக்கு ஒரு தனிக் கோட்டம் இருந்தது. அது 'தரு நிலைக் கோட்டம்'[13] ஆகும். இவ்விடத்திலே இந்திரவிழாவின் போது கொடியேற்றி விழா கொண்டாடுவர்.

### இந்திரன் கோயில்

இந்திரனுக்குத் தனிக்கோயில் இருந்தமைப் பற்றி சிலம்பு

"மாலை வெண்குடை மன்னவன் கோயில்"[14]

என கூறுகிறது.

இதற்கு அடியார்க்கு நல்லார் "முத்துமாலை யணிந்த வெண்கொற்றக் குடையையுடைய வாசன் கோயில்"[15] என்று உரை வகுக்கின்றார்.

### இந்திரன் விழா

இந்திர விழாவின் போது, விழாவின் தலைவனான இந்திரனை நீராட்டுவதற்கு ஐம்பெருங்குழுவும், எண் பேராயமும்,[16] அரசரும், வணிகக் குமரரும், மற்றும் பல வீரர்களும் வந்து 'உரைசால் மன்னன் கொற்றம்

கொள்வானாக' என வாழ்த்தி காவிரி சங்கமத்துறையில் இருந்து, ஆயிரத்தெட்டரசர் தலையில் கொண்டு வந்த ஆயிரத் தெட்டுக் குடம் புண்ணிய நன்னீரால் வச்சிரக் கோட்டத்தில் இந்திரனை நீராட்டினர் என்பதை

> *"புண்ணிய நன்னீர் பொற்குடத் தேந்தி*
> *மண்ணக மருள வானகம் வியப்ப*
> *விண்ணவர் தலைவனை விழுநீ ராட்டி"*[41]

இவ்வாறு இளங்கோவடிகள் கூறுகிறார்.

### *பிற கடவுளர் விழா*

ஊரில் பெரிய விழா நடைபெறுகின்ற காலங்களில், ஊரிலுள்ள பிற தெய்வங்களையும் வணங்கி விழா எடுப்பது ஒரு பழக்கமாகும். இதே போன்று இந்திர விழாவின் போது பிற தெய்வங்களுக்கும் விழா நடை பெற்றமை அறியலாம்.

இந்திரா விழா ஒரு குறிப்பிட்ட மக்களுக்கேயன்றி அனைத்து மதத்தினர்க்கும் உரிய விழாவாகவே காட்சி அளிக்கிறது. இவ்விழாவின் போது ஊரில் மற்ற தெய்வங்களான சிவன், முருகன், திருமால், பல ராமன், மன்னன் ஆகியோர்களின் கோயில்களில் பிரமதேவன் அருளிய நான்மறை மரபுகளின் படியே தீமுறை வேள்விகள் நிகழ்த்தி விழா நடைப்பெற்றது என்பதைச் சிலம்பு

> *"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்*
> *அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்*
> *வால்வளை மேனி வாலியோன் கோயிலும்*
> *நீல மேனி நெடியோன் கோயிலும்*
> *மாலை வெண்கொடை மன்னவன் கோயிலும்*
> *மாமுது முதல்வன் வாய்மையின் வழாஅ*
> *நான்மறை மரபின் தீமுறை யொருபால்"*[43]

இவ்வாறு கூறுகிறது.

மேலும் நால்வகைத் தேவருக்கும், பதினெண் வகைக் கணங்களுக்கும்[44] மற்றும் வேறுவேறு கடவுளர் களுக்கும் சிறப்பாக விழா நடைப்பெற்றது.

இவ்வாறு இந்திர விழாவின் போது, இந்திரனால் அனுப்பப்பட்ட பூதத்திற்கும், மண்டபங்களிலும், ஐவகை மன்றங்களிலும், கோட்டங்களிலும், பிற தெய்வங்களாகிய, முருகன், திருமால் முதலியவர்களின் கோயில்களிலும் விழா நடைப்பெற்றது. இதனால் இந்திர விழா ஒரு பொதுவிழா ஆகும்.

### வீதியின் செறிவு

கிம்புரி பொறித்த கொம்பினையும், முத்துச் சிப்பியைப் பிளந்து பெற்ற ஒளியுடைய முத்துக் களையும் அமைத்து மங்கலம் பொறித்த வாசிகை வடிவாக வளையச்செய்த மகர தோரணங்களும் நெடு நிலை மாளிகைகளின் வாயிலிடந்தோறும் விளங்கின. பசும் பொன்னாற் செய்த பூரண கும்பங்களும், முளைப் பாலிகைகளும், விளக்கும், வெண்சாமரையும், வீதியெங்கும் அலங்கரித்து ஊர்வலமாக வரும் இந்திரனை வரவேற்கவும், வணங்கவும், வீடுகள் தோறும் மக்கள் காத்திருந்தனர்.[10]

### இசை நிகழ்ச்சிகள்

இந்திர விழாவில் இந்திரனுக்கும், பிற தெய்வங் களுக்கும் சிறப்பாக வழிபாடு நடைபெறுவதால் துளைக் கருவி இசைக்கும் பெரும்பாணரும், தோற் கருவி இசைக்கும் குயிலுவரும், நரம்புக் கருவி இசைக்கும் யாழ்ப்புலவரும், மிடற்றுக் கருவியால் இசைபாடும் பாணரும், இவர்களால் சிறந்த முறையில் குறுந்தெருக்களிலும், நெடிய தெருக்களிலும் இரவும் பகலும் இடைவெளியின்றி இசை ஒலித்தன. இதனால் ஊர்மக்கள் மகிழ்ச்சியுடன் இருந்தனர்.

### சொற் பொழிவுகள்

ஊரில் விழா நடக்கின்ற காலத்தே சொற் பொழிவுகள் நடைபெறுவது வழக்கமாக அன்றும், இன்றும் இருந்த, இருக்கின்ற வழக்கமாகும். அம்

முறைப்படி இந்திர விழாவின் போது அறவோர்ப் பள்ளியிலும், அறச்சாலைகளிலும், புண்ணிய இடத்திலும், திறமை உடையவர் உரைக்கும் சொற் பொழிவுகள் நடைப்பெற்றன என்பதை

"அறவோர் பள்ளியும் அறனோம் படையும்
புறநிலைக் கோட்டத்துப் புண்ணியத் தானமும்
திறவோ ருரைக்குஞ் செயல்சிறந் தொருபால்"[11]

இவ்வரிகள் மூலம் அறியலாம்.

## தளை நீக்கல்

விழா யாவரும் மகிழ்ந்து கொண்டாடுகின்ற நாளாகலின் பிற உயிர்களைத் துன்புறுத்த மக்களும், மன்னரும் விரும்பமாட்டார். இந்திர விழா நடக்கும் காலத்தில் சோழமன்னனிடம் போரில் தோற்று சிறைக் கைதியாக இருக்கும் மன்னர்களின் விலங்குகள் அகற்றப்பட்டன என்பதை

"கொடித்தேர் வேந்தனொடு கூடா மன்னர்
அடித்தளை நீக்கி அருள் சிறந் தொருபால்"[12]

இவ்வாறு சிலம்பு பகர்கின்றது. விடுபட்ட மன்னரும் இந்திர விழாவில் இன்பத்துடன் கலந்து கொண்டனர். இந்திர விழாவில் எவரும் துன்பத்துடன் இல்லை என்பதற்கு இது ஒரு சான்றாகும்.

## ஆடவர் மயக்கம்

விழாக் காலங்களில் இளைஞர்கள் நல்லுடை உடுத்து வீதியோரங்களில் நின்று அவ்வழியில் போவோர் வருவோரைக் கண்டு கேலி செய்து மகிழ்வது வழக்கம். இந்திர விழாவின் போது இத்தகைய நிகழ்ச்சிகள் நடைப்பெற்றதை இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார்.

தெருவிலே உலாவந்த ஒரு பரத்தையின் முகவழகினைக் கண்ட சிலர் மயங்கி, வானத்திலே உள்ள திங்கள் அரவுப்பகைக்கு அஞ்சி இங்கே வந்து திரி

கின்றதோ என்று கூறினர். மகரக் கொடியோனான காமன் வளர்த்த மின்னுக் கொடியும் இங்கே வருதலும் உண்டோ என ஒருத்தியின் மின்னல் போன்ற இடை அழகைக் கண்டு பிதற்றினர் என்பதை

> "மீனேற்றுக் கொடியோன் மெய்பெற வளர்த்த
> வானவல்லி வருதலும் உண்டுகொல்"[10]

இவ்வரிகள் மூலம் அறியலாம்.

இவ்வாறு இந்திர விழாவில் பரத்தையரின் அழகைக் கண்டு ஆண்கள் மயங்கிய நிலையில் இருந்தனர்.

### கலை நிகழ்ச்சி

விழாவில் கலை நிகழ்ச்சி இடம் பெறுதல் இயல்பான ஒன்றாகும். இந்திர விழாவின் போது கொடியேற்றுதல், இந்திரனை நீராட்டல், பிற நிகழ்ச்சிகள் எல்லாம் நிரலே விளக்கிய இளங்கோ இந்திர விழா முடிவில் மாதவியின் ஆடலைக் கொண்டு முடிக்கிறார்.

பல உயிர்களுக்கு நன்மை செய்வதையே குறிக்கோளாக உடைய, வானிலே ஊர்ந்து செல்லும் சந்திரனை பாடியும், திருமாலைப் பரவுகின்ற தேவபாணியிலும், வருண பூதர் நால்வரையும் பரவும் நால் வகைப் பாணியிலும் மாதவி தெய்வங்கள் ஆடிய பதினொறு ஆடல்கள்" ஆடினாள். அவை முறையே வருமாறு:

### கொடு கொட்டி

திரிபுரம் எரித்த வெற்றி மகிழ்ச்சியால் சிவன் உமாதேவியை ஒரு பாகத்திலே கொண்டு ஆடியது. கொடு கொட்டி ஆடும்போது பயன்படும் வல்லோசைப் பறையும் கொடுகொட்டி ஆகும். எனவே இதற்கு கொடுகொட்டி என்பர்.

### பாண்டரங்கம்

தேவர்களாகிய தேரில் நான்மறைகளாகிய குதிரை பூட்டித் தேரில் தேரோட்டியான பிரமன் எதிரே வாணியின் உருக்கொண்டு சிவன் ஆடிய கூத்தாகும்.

### அல்லியம்

கஞ்சன் விடுத்த யானையின் கொம்பை முறித்த பின் கண்ணன் ஆடிய கூத்து ஆகும்.

### மல்லன்

வாணனை வெல்வதற்காகக் கண்ணன் மல்லனாய்ச் சென்று, அவனை வெல்வதற்காக ஆடிய மறக் கூத்தாகும்.

### துடி

கடலின் நடுவே மறைந்த சூரனை வென்று, அக் கடலில் எழும் அலைகளையே அரங்கமாகக் கொண்டு முருகன் ஆடியது துடிக்கூத்து ஆகும்.

### குடை

படைகளைக் களத்திலே போட்டுவிட்டு, அவுணர்கள் வருத்தமுற்ற அளவிலே முருகன் குடையை முன்னே சாய்த்துக் கொண்டு ஆடிய கூத்து குடைக் கூத்து ஆகும்.

### குடம்

வாணன் தன் மகள் உழை காரணமாகக் காமன் மகன் அநிருத்தனைச் சிறைவைக்க அவனை சிறை மீட்க கண்ணன் குடங்கொண்டு ஆடியது குடக் கூத்தாகும்.

### பேடி

காமன் தன் மகன் அநிருத்தனைச் சிறைமீட்டு பேடிக்கோலத்துடன் சோ நகரத்தில் ஆடிய கூத்து.

**மரக்கால்**

அவுணர்கள் வஞ்சனையால் வெல்லக் கருதி தன் மேல் பாம்பு, தேள் வடிவில் புகுந்ததை உணர்ந்த கொற்றை அவற்றை கொல்ல மரக்கால் கொண்டு ஆடிய கூத்து மரக்கால் கூத்தாகும்.

**பாவை**

போர் புரிவதற்கு முற்பட்ட அவுணர்கள் மோகித்து விழ திருமகள் கொல்லிப் பாவை வடிவுகொண்டு ஆடிய கூத்தாகும்.

**கடையம்**

வாணன் கோட்டை வடக்கு வாயிலின்கண் இந்திராணி கடைசியர் வடிவுகொண்டு ஆடிய கூத்தாகும்.

இவ்வாறு இந்திர விழாவின் போது மாதவி ஆடிய ஆடல்களைக் கண்டு மக்கள் மகிழ்ந்தனர். மாதவி ஆடலுடன் இந்திர விழா இனிதே முடிந்தது.

**காமன் விழா**

இங்குக் காமனைப் பற்றியும், அவனுடைய கோட்டங்கள் பற்றியும், காமன் விழாப் பற்றியும் ஆயப்பெற்றுள்ளது.

**காமன்**

காமன் என்ற சொல் சிற்றின்பத்தை தூண்டும் ஒரு தேவனின் பெயர் ஆகும். காமம் உண்டாக்குவதால் இவனைக் காமன் என்று அழைத்திருக்கலாம். 'காமன் ஆன்மாவின் முதல் பிறப்பு என்று ரிக்வேதம் கூறும்."[1] 'காமன் விஷ்ணுவின் குமரன் ஆவான்'."[2] சிவன் கோபத்தால் உருவம் எரிந்ததால் காமனுக்கு உருவம் கிடையாது.

காமனைக் கிரேக்கர் 'இராஸ்' என்றும், ரோமானியர் 'கூப்பிட்' என்றும் அழைப்பர். இவன் போர்த்

தேவனாகிய மார்ஸுக்கும், காதல் தெய்வமான வீனஸுக்கும் பிறந்தவன்" " என்று மேனாட்டில் கூறுவர்.

இந்து மதத்தினர் காமனைச் சிறப்பாக வழிப் படினும் புத்த, சமண மதத்தினர் அவனை மிகவும் இழி வாக நினைக்கின்றனர். இதற்குக் காரணம் அவர் களுடைய மதக்கொள்கையே ஆகும்.

"காமன் என்பதற்கு இச்சை, சிற்றின்பம், ஆசை, விருப்பம் முதலிய பல பொருள்கள் உள எனினும் இச் சொல் சிற்றின்பத்திற்கு உரியதாகவே இன்று வழங்கப் படுகிறது"." இச்சிற்றின்பத்தை உண்டாக்க வல்லவன் காமன் ஆவான். காமன் செயலால் மக்களே யன்றி கடவுளர்களும் நிலை தடுமாறியுள்ளனர். காட்டாக சிவனைக் கூறலாம். காமன் மனித இனத்தை உல கத்தில் நிலைநிறுத்த உதவிபுரிகிறான்.

காமனுக்கு இரதி என்ற மனைவியும், அநிருத்தன் என்ற மகனும், திரிசை என்ற மகளும் உண்டு"."

## காமன் வேறு பெயர்கள்

காமனுக்கு பல பெயர்கள் இருப்பதை பிங்கலந்தை என்னும் நிகண்டில் "மான்மகன், மதனன், மகரக் கொடியோன், வேனிலாளி, வேள், வசந்தன், அங்குசன், அநங்கன், ஐங்கணைக் கிழவன், திங்கட் குடையோன் தென்றல் தேரோன், வனசன், வில்லி, மோகன், மலர்க் கணையோன், மதிசகன், இரதிகாந்தன், மாரன், மனோபவன், மேனோசன், மனோபு, மன்மதன், திரு மகன், சம்பர்சூதனன், உருவிலி, கடன்முரசோன், கைதைச் சுரிகையன், கந்தர்ப்பன், சித்தசன், பூவாளி, பூமன், கரும்பு வில்லி"" என கூறப்பட்டுள்ளது.

ஆங்கிலக் கலைக் களஞ்சியத்திலும் மன்மதனுக்கு, பின்வரும் பெயர்கள் இருப்பதாகக் குறிக்கப் பெறு கின்றன.

"காமனை, மதன் (மிகு காமத்தில் அமிழச் செய்பவன்); மன்மதன் (உள்ளத்தைச் சலனப்படுத்துபவன்); ஸ்மரன் (ஆன்மாவின் காம இச்சையிலிருந்து தோன்றுபவன்); கார்ஸனி (கிருஷ்ணன் மகன்); தர்பகன் அல்லது தீபகன் (பூங்கொத்துடன் காட்சிதரும் நல்லிளமையாளன்); பிரத்தியும்னன் (யாவரையும் வெற்றி கொள்வோன்); காமனன் (காம வடிவினன்); காலக்கேளி (மகிழ்ச்சி வடிவினன்); மாயன் (மயக்குபவன்); மதுதீபன் (தேனொழுகும் வில் உடையவன்); முகிரன் (காம உணர்ச்சியைத் தூண்டுபவன்); மூர்முரன் (அணையாக் காதல் வடிவினன்); இராக - விரந்தன் (காமத்தினொடு ஒளிந்து வேட்டையாடுபவன்); ரூபஸ்திரன் (அழகின் ஆயுதமானவன்); சாமந்தகன் (மனதை அலைக்கழிப்பவன்); சம்சாரகுரு (உலக ஆசிரியன்); வாமன் (அழகன்) இரத மாரீசன் (சிற்றின்பத் தோய்வாளன்)".[61]

சிலம்பில் மன்மதனைக் குறிக்கும் பெயர்கள் காமன்,[62] காமவேள்,[63] காமக் கடவுள்,[64] நெடுவேள்,[65] மகரக் கொடியோன்,[66] மகர வெல்கொடி மைந்தன்,[67] மாரன்,[68] உருவிலாளன்,[69] ஐங்கணை நெடுவேள்,[70] கலையிலாளன்,[71] என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார்.

மேற்கண்ட பல பெயர்கள் காமனை அழைக்கப் பெறினும், காமன், காமவேள், காமதேவன், காமக் கடவுள், மதன், மன்மதன், மாரன், முதலிய பெயர்களே மக்கள் நன்கறிந்த பெயர்களாகும்.

**காமன் படை**

காமன் ஒரு கடவுள்; எனவே அவனுக்கு என்று தனியாகப் படை இருந்தது. அவற்றின் மூலமே மக்களுக்குக் காமத்தை உண்டாக்குவான்.

காமன் வண்டை நாணாகக்கட்டிய[72] கரும்பு வில்லை[73] உடையவன், அவ்வில்லில் பூட்டப்பெறும்

அம்பானது நறும்பூவாளி, மலர்க்கணைகள்[14] முதலிய வற்றைப் பெற்றிருக்கும். இவற்றையே மக்கள் மீது ஏவி காமத்தை உண்டாக்குவான். காமனுடைய தேர் தென்றலாகும்.[15] அத்தேரின் மீது மகரக்கொடி[16] கட்டி யிருக்கும். இவனது படை இளமகளிர்,[17] குயிலொலி காமனது எக்காளமாகும்[18] இவைகளே சிலம்பில் கூறும் காமன் படைகள் ஆகும்.

## காமன் கோட்டம்

உருவம் இல்லாத காமனுக்குக் கோட்டம் கட்டி அக்கோட்டத்திற்கு கன்னிப்பெண்கள் சென்று நல்ல கணவன் கிடைக்க வேண்டும் என்று வழிபடுவர்.

"காமனுக்கு இராசகினியத்தின் புற நகரத்திலுள்ள சோலையில் கோயில் இருந்தது. அக்கோயிலில் பலர் வந்து வணங்கி சென்றனர்".[19] சங்ககாலத்தில் காமனுக்குக் கோயிலிருந்ததை

> "... ... காமன் மடையரும்
> பாலொடு கோட்டம் புகின்"[20]

என்னும் பாடல் மூலம் அறியலாம்.

சிலம்பில் காமன் கோயில் பற்றிக் கூறுகையில் சோமகுண்டம், சூரிய குண்டம் என்ற இரண்டு பொய் கைகளில் நீராடி, அப்பொய்கைக் கரையில் இருக்கும் காமன் கோட்டத்திற்குச் சென்று தொழுத மகளிர்கள் தம் கணவரோடு இப்பிறப்பே யன்றி, மறுபிறப்பிலும் பிரியாது இன்புற்று இருப்பர் என்பதை

> "சோமகுண் டம் சூரிய குண் டந் துறைமூழ்கிக்
> காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடு
> தாமின் புறுவ ருலகத்துத் தையலார்
> போகஞ்செய்பூமியினும் போய்ப் பிறப்பர் யாமொருநாள்"[21]

இதன் வாயிலாக உணர்த்துகிறார் இளங்கோ அடிகள்.

### காமன் நோன்பு

கன்னிப் பெண்கள் விரும்பிய கணவனை அடைய வேண்டி காமனை நோக்கி நோன்பு நோற்றனர்.

நாச்சியார் திருமொழியில் வீட்டை மெழுகிக் கோலமிட்டுத் தையொரு திங்கள் நோன்பு நோற்றமை அறியலாம்.[82] காமவேள் கோட்டம் சென்று நோன்பு நோற்றல் பெருங்கதை[83] சீவக சிந்தாமணி[84] மூலம் தெரியவருகிறது. பெண்கள் பால்கொண்டு காமன் கோயிலுக்குச் சென்று வழிப்பட்டனர் என்பதைக் கலித்தொகை கூறுகிறது.[85]

### காமன் விழா

காமனுக்கு ஆண்டுதோறும் பல இடங்களில் விழா எடுத்தனர். இப்போதும் எடுக்கின்றனர். சான்றாக "கேரளப் பெண்கள் காமன் எரிந்த (இவ்) விழாவினை ஆண்டு தோறும் கொண்டாடுகின்றனர்".[86] காமன் விழா செய்வதன் நோக்கம் ஆணும், பெண்ணும் சேர்ந்து இன்புற்று இருக்கவே ஆகும்.

ஆண்களைவிட "மகளிரே இவனை வழிபட்டு வேண்டுவர். சிறந்த கணவனைத் தனக்குத் தர வேண்டும் எனவும், தன் கணவன் தன்னிடத்தே அன்புடன் பிரியாமல் இருக்க வேண்டும் எனவும் காமனைப் பெண்கள் வேண்டி வழிபட்டு வருகின்றனர்".[87] மதுரையில் ஆண்டுதோறும் பங்குனித் திங்களில் காமனுக்கு விழா நடைப்பெற்றது. இதை 'நெடுவேள் வில்விழா' என்று அழைத்தனர் என்பதை

> "வெங்கண் நெடுவேள் வில்விழாக் காணும்
> பங்குனி முயக்கத்துப் பனியர சியாண்டுளன்"[88]

இவ்வரிகள் மூலம் அறியலாம்.

"இக்காமவேள் வணக்கமே பிற் காலத்தில் பிறை வணக்கம், பாவை நோன்பாக விளக்கமுற்றுத் திருப்

பாவையிலும் திருக்கோவையிலும் இடம் பெற்றது என்பர்".[11]

இவ்வாறு சிலம்பில் காமனைப் பற்றியும், மதுரையில் நடைப்பெற்ற விழாப் பற்றியும் கூறப்படுகிறது.

### கொற்றவை விழா

கொற்றவைக்காக கொண்டாடும், கொற்றவை விழாக் குறித்து இங்கு ஆயப்பெறுகிறது.

### கொற்றவை

கொற்றவை போரில் வெற்றியைத்தரும் பெண் தெய்வம். "கொற்றம்-வெற்றி; அவ்வை-உயர்ந்தவள், மேலானவள் என்று பொருள்".[12] அரசர்களும், போர் வீரர்களும் போரில் தங்களுக்கு வெற்றி கிடைக்க வேண்டி, கொற்றவையை வணங்கிச் செல்வர். அவர்களுக்கு வெற்றியைத் தந்து, அவர்கள் கைம்மாறாகத் தரும் ஆண்மைக் கடனை எதிர் பார்த்திருப்பவள் "கொற்றவையைத் தமிழர் மட்டுமல்லாமல் திராவிட இனத்தவர் எல்லோரும் வணங்கினார்கள். கொற்றவை என்னுஞ்சொல் வடமொழியில் 'கொட்டவா' என்று வழங்கப்படுகிறது".[13]

கொற்றவை முதன்மையாகக் கொண்டு வழிப்படும் சமயத்திற்குச் "சாக்த மதம்" என்று பெயர். கொற்றவை பாலை நில தெய்வமாவாள். தொல்காப்பியர் பாலைக்கு நிலம் கூறவில்லை. முல்லை, குறிஞ்சி என்னும் இரு திணையும் முறைமை திரிந்து, தமது நல்லியல்பை இழந்து பாலையென்பதோர் வடிவை அடைந்தது என்பதை இளங்கோவடிகள்

> "முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து
> நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
> பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்"[14]

இவ்வாறு பாலைநிலத்தை முதன்முதலில் குறிப்பிடுகிறார். இதன் தெய்வமான கொற்றவைச் சிறப்புச்

செய்யும் வண்ணம் 'வேட்டுவ வரி' என்று ஒரு காதை அமைந்துள்ளது.

"கொற்றவை முக்கடவுளுக்கும் ஆற்றல் தருகின்றவள்"[91] ஆவாள். கொற்றவையைச் சிவபெருமானின் மனைவி என்றும், பார்வதியின் ஒரு அம்சம் என்றும் சிலம்பு கூறுகிறது.[92] சிலம்பில் கொற்றவை என்ற சொல் ஐந்து இடங்களில் கூறப்பெற்றுள்ளது.[93]

### சங்க இலக்கியத்தில் கொற்றவை

கொற்றவை வழிபாடு சங்க காலத்தில் இருந்தது. அத்தெய்வத்தை வெற்றித் தெய்வமாக கருதினர் என்பதை திருமுருகாற்றுப்படையில்

"வெற்றி வேல் போர்க் கொற்றவை"[95]

என்றும், நெடுநல்வாடையில் போருக்குத் தலைவனை அனுப்பிய தலைவியின் தோழிமார் தலைவன் வெற்றியுடன் மீளவேண்டும் என்று வெற்றி தெய்வமான கொற்றவையை வணங்கினர்.[96] போரின் துவக்கத்தை விளக்க வந்த தொல்காப்பியர் கொற்றவநிலை, துடிநிலை என்ற இரண்டை சிறப்புத் துறைகளாகக் குறிப்பிடுகிறார்.[97]

முருகனுடைய தாய் கொற்றவை என்று திருமுருகாற்றுப் படை கூறுகிறது.[98] கொற்றவையை சேரர் வணங்கினர் என்பதைப் பதிற்றுப்பத்தால்[99] அறியலாம். கொற்றவைக்குப் பலிக்கடன் கழித்ததைப் பற்றிக் குறுந்தொகை[100] கூறுகிறது.

இவற்றிலிருந்து கொற்றவை வழிபாடு சங்க காலத்தில் இருந்து வருகிறது என்பதை அறியலாம்.

### கொற்றவை-வேறு பெயர்கள்

அமரி, குமரி, கவுரி, சமரி, சூலி, நீலி, மாலவற் கிளங்கிளை, ஐயை, செய்யவள், தடக்கைப்பாய், கலைப்

பாவை, பைந்தொடிப்பாவை, ஆய்கலைப்பாவை, அருங்கலப்பாவை[101] உமையவள், மலைமகள்,[102] மாய்வள்,[103] வாளுழத்தி,[104] விண்ணோர் பாவை,[105] விழி நுதல் குமரி[106] முதலிய பல பெயர்கள் கொற்றவைக்கு உண்டு.

## சிவனோடு ஒற்றுமை

கொற்றவை பல நிலையில் சிவனோடு ஒத்து இருக்கின்றாள். சிவன் தேவர்களைக் காப்பாற்ற நஞ்சு உண்டதைப் போல் இவளும் நஞ்சினை உண்டு விண்ணோரை காப்பாற்றினாள் என்பதை

> "விண்ணோர் அமுதுண்டுஞ் சாவ ஒருவரும்
> உண்ணாத நஞ்சுண் டிருந்தருள் செய்குவாய்"[107]

என்றும்

> "நஞ்சுண்டு கறுத்த கண்டி ...[108],,

என்றும் சிலம்பு கூறுகிறது.

சிவனது உடையைப் போன்றே கொற்றவையும் யானைத்தோல் உடுத்தி, அதன் மீது புலியின் தோலை மேகலையாக அணிந்தவள்.[109] சிவனைப் போன்று சடைமுடியும், அதில் பாம்பும், இளம்பிறையும் சூடியவள்.[110] மேலும் இடக்காலில் சிலம்பும், வலக்காலில் வீரக்கழலும் அணிந்து, கங்கையைச் சடைமுடியிலே கொண்டவள்.[111]

கொற்றவை சிவனின் மனைவி, சிவன் தனது உடலில் சரிபாதி சக்திக்குக் கொடுத்தமையால் சிவனைப் போன்று பல வகையில் ஒற்றுமை இருப்பது பொருத்தமாகும்.

## திருமாலோடு ஒற்றுமை

கொற்றவை சிவனோடு ஒற்றுமைப் பெற்று இருப்பது போல், திருமாலோடும் பலவகையில் ஒற்றுமை கொண்டுள்ளாள்.

கொற்றவை திருமாலைப் போல் சங்கையும், சக்கரத்தையும், தாமரையையும் கையிலே ஏந்தியவள் என்பதை

"சங்கமும் சக்கரமும் தாமரைக் கையேந்தி"[113] என்ற வரி மூலம் அறியலாம். திருமால் போல் நிறத்தில் ஒத்தவள் என்பதை "காயா மலர் மேனி ஏத்தி"[113] என்பதன் மூலம் அறியலாம்.

கொற்றவை திருமாலின் தங்கை ஆவாள் எனவே பல வகையில் திருமாலோடு ஒற்றுமை பெற்று இருக்கிறாள்.

## கொற்றவை கோட்டம்

கொற்றவையைப் பற்றிய செய்திகள், சங்க இலக்கியங்களில் குறிப்பு வரினும் அவளுக்கு என்று கோட்டம் இருந்தமைப் பற்றிய குறிப்பு ஏதுமில்லை. சிலம்பில் கொற்றவைக் கோயில் இருந்தமை அறியலாம்.

மதுரைக்குச் செல்லும் வழியில் ஐயைக்கோட்டம் இருந்தது.[114] கண்ணகியும், கோவலனும் மதுரை நோக்கிச் செல்லும் போது இக்கோட்டத்தில் தங்கிச் சென்றனர். மதுராபதி தெய்வத்தின் வாய்வழியாக இன்னொரு ஐயைக் கோயில்[115] இருந்தமை அறியலாம். கண்ணகி கணவனை இழந்து மதுரையை விட்டுப் போகும் போது கொற்றவையின் கோட்ட வாயிலில் பொற்றொடியினைத் தகர்த்துவிட்டு மேற்றிசை வாயில் வாழியாகச் சென்றாள் என்ற செய்தியின் மூலம் கொற்றவைக்கு மற்றொரு கோயில் இருந்தைப் பற்றி அறியலாம்.[116]

மேற்கூறிய சான்றுகளிலிருந்து கொற்றவையின் கோயில் மதுரைக்கு வரும் வழியில் (கீழ்த் திசையில்) மதுரையிலும், மதுரையை விட்டுப் போகும் வழியிலும் (மேற்றிசையில்) இருந்தன என்பதை அறியலாம்.

## கொற்றவை திருக்கோலம்

கொற்றவை இமையாத நெற்றிக் கண்ணும், பவளம் போன்ற வாயும், முத்தொளி விளங்கும் சிரிப்பும் உடையவள்.[117] நஞ்சுண்டதால் கறுத்த கழுத்தினள்; யானைத் தோலையும், புலித்தோலையும் உடுத்தியவள்; கையில் சூலம் ஏந்தியவள். மகிடா சுரனைக் கொன்று அவன் தலைமீது விற்றிருப்பவள்:

## கொற்றவை விழா

கொற்றவையைச் 'சக்தம்' மதத்தினரும் பிற மதத் தினரும் வழிபடுவர். சிலம்பில் வேட்டுவர் கொற்ற வையைப் பலவிதமாக அலங்கரிக்கின்றனர். கொற்ற வையின் கூந்தலைச் சடையாகக் கட்டிச் சிறிய பாம்புக் குட்டியை நாணாகக் கட்டி, அக்கூந்தலில் பன்றியின் கொம்பை இளம்பிறையாக அணிந்து, புலிப்பல்லைத் தாலியாகக் கட்டிப் புலியின் தோலை ஆடையாக உடுத்தி, உறுதியான வில்லைக் கையில் கொடுப்பர். இவ்வாறு அலங்கரித்துப் பிறகு, முறுக்கிய கொம் பினையுடைய கலைமானின் முதுகில் ஏற்றி வைத்தனர். பின்பு பாவை, கிளி, கானங்கோழி, மயில், பந்து, கழங்கு முதலானவைகளைக் கொடுத்தனர் என்பதை

> "திரிதரு கோட்டுக் கலைமே லேற்றிப்
> பாவையுங் கிளியுந் தூவி அஞ்சிறைக்
> கானக் கோழியும் நீனிற மஞ்ஞையும்
> பந்துங் கழங்குந் தந்தனர் பரசி"[118]

இவ்வரிகள் உணர்த்துகின்றன. இத்தகைய பொருள் களை கொடுத்தபின் சுண்ணப் பொடியும், சந்தனமும், பரவும் புகையும், புழுக்கலும், எள்ளுருண்டையும், நிணச்சோறும் படையலாகப் படைத்து, வழிபறிக்க முழங்கும் பறையும் சூறையாடும் காலத்திலே ஊதும் சின்னமும், கொம்பும் குழலும் இசை முழங்க வேட்டுவர் கொற்றவைக்குப் பூசை செய்து விழா கொண்டாடி னார்கள்.[119]

### முருகன் விழா

முருகனுக்காக குறவ மக்கள் கொண்டாடிய விழாவைப் பற்றியும், முருகனைக் குறித்தும் ஆய்வோம்.

### முருகன்

"உயிர் கட்கு வேண்டுவது மூன்று சுகம்; இகம், பரம், வீடுபேறு; இந்த மூன்று இடங்களிலும் காத்தருளுந் தெய்வம் முருகன். அதனால் அப்பெருமான் மூன்று உகரங்களுடன் கூடிய முருகு என்ற சொல்லையுடைய தனிப்பெருந் தெய்வமாக விளங்குகின்றான்".[120] இத் தகைய சிறப்பு பொருந்திய முருகனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயத்திற்கு 'கௌ மாரம்' என்று பெயர்.

முருகன் என்ற சொல்லை முருகு + அன் என்று பிரிக்கலாம். முருகு என்பதற்கு "அழகு, இளமை, மணம், கடவுட்டன்மை, ஆகிய பொருட்களிற் பொதுளும்".[121] முருகன், அழகையும், இளமையையும், நல்ல மணத்தையும் கடவுட்தன்மையையும் ஒன்றுசேர பெற்றவன் என்பதால் 'முருகு' என்பர். முருகு என்னும் சொல்லோடு 'அன்' எனும் ஆண்பால் விகுதிபெற்று 'முருகன்' என்று வழங்கப்பட்டது.

"நீலக்கடலின் மீது நீலவானுக்கு முன்னாகத் தோன்றும் இளஞாயிற்றின் காட்சி, தோகை விரித்த மயிலின் மீது வீற்றிருக்கும் சேயோனது காட்சி போலு மாதலின், அதன் அழகைக் குறிப்பதற்கு அங்கே வழி படப்படும் தெய்வத்தின் பெயர் முருகன் எனப்பட்டது. மலையுச்சியின் அக்காட்சித் தெளிவாகத் தோன்றி வணங்கப்படுதலின் மலைக்குரிய சிறந்த தெய்வம் முருகனாகக் கொள்ளப்பட்டது".[122]

முருகன் சிலப்பதிகாரக் காலத்தில் வளர்ச்சியடைந்த நிலையில் காணப்பெறுகிறான். முருகனைச் 'செவ்

வேள்', 'மலைமகள் மகன்' 'ஆறுமுகவொருவன்', 'குருகு பெயர்க்குன்றங் கொண்ட நெடுவேலே', 'ஆலமர் செல்வன் புதல்வன்', 'கடம்பன்'; 'கயிலை, மலை இறைமகன்' 'கார்க்கடப்பந்தார்க் கடவுள்' 'சூர்த்திறங் கடந்தோன்' [123], முதலிய பெயர்களில் இளங்கோவடிகள் அழைக்கின்றார்.

சரவணப் பொய்கையில் ஆறு கார்த்திகை பெண்களால் வளர்க்கப்பட்டவன். முருகன் ஆறுமுகங்கள், பன்னிரண்டு கைகள் உடையவன்.[124] மயில் ஊர்த்தியாகும்.[125] சேவற் கொடியை உடையவன்.[126] கடப்பந்தாரை மாலையாகக் கொண்டவன்[127] முருகன் ஆவான்.

## கோயில்கள்

குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் இருப்பன் என்பர் சான்றோர். அவ்வகையில் குன்றுகளின் மேல் குமரன் கோயில்கள் இருந்தன என்பதை இளங்கோவடிகள் 'நெடுவேள் குன்றம்',[128] 'வெண்வேலான் குன்று'[129] என்று கூறுகிறார். ஊர்களில் சில கோயில்கள் இருந்தன: 'கோழிச் சேவற்கொடியோன் கோட்டம்', 'வேற்கோட்டம்',[130] 'ஆறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயில்'[131] முதலியனவாகும்.

## முருகன் ஆடிய ஆடல்கள்

முருகன் ஆடிய ஆடல்களுள் துடி, குடை ஆகிய வைப்பற்றி சிலம்பில் குறிப்புகள் வருகின்றன. அவற்றைக்காண்போம்.

### துடி

கரிய நிறத்தையுடைய கடலினிடையே மறைந்த சூரனை கொன்ற முருகன். நீரின் அலையையே அரங்கமாகக் கொண்டு துடிகொட்டி ஆடிய கூடிக் கூத்து ஆகும் இதனைச் சிலம்பில்

"... ... ... மாக்கட லடுவன்
நீர்த்திரை யரங்கத்து நிகர்த்துமுன் னின்ற
சூர்திறங் கடந்தோ னாடிய துடியும்"[132]

இவ்வாறு கூறுகிறது.

குடை

அவுணர்கள் முருகனுக்கு எதிராகப் போர் செய்தனர். போரின் இறுதியில் படைக்கலங்களை இழந்து வருத்தமுற்றனர். அப்போது முருகன் தன் குடையை சாய்த்து ஆடிய கூத்து குடைக்கூத்து ஆகும்.

படை வீழ்த் தவுணர் பையு ளெய்தக்
குடைவீழ்த் தவர்மு னாடிய குடை"[133]

என்று சிலம்பில் வருகிறது.

விழா கொண்டாடுதல்

குன்றக் குறவர் வேங்கை மரநிழலில் கண்ணகி யைக்கண்டு, அவள் தம் குலமகளான வள்ளிபோல் இருக்கிறாள் எனவே தமது குலதெய்வமான முருகனை நோக்கிக் கொண்டாடுவோம் என்று குறவ மகளிர் புனலில் நீராடிய பின்னர் முருகனை வாழ்த்திக் குறவை கூத்தாடி விழா கொண்டாடும் போது முருகனை எண்ணி ஆடினார்கள். அப்போது, அழகிய ஆறுமுகங் களும், ஈறு ஆறு கையுமாய் ஒப்பற்று விளங்கும் முருகன் மயில்மேல் சென்று அவுணரை அழித்தமை எண்ணி பாடுகின்றனர்.

"அணிமுகங்க ளோராறும் ஈராறு கையும்
இணையின்றித் தானுடையான் ஏந்திய வேலன்றே
பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ணம்
மணிவிசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே"[134]

இவ்வாறு இளங்கோ அடிகள் கூறுகிறார். அடுத்து முருகனுடைய பிறப்புப் பற்றியும், அவனுடைய வேல் சிறப்பைப் பற்றியும் பாடும்போது சரவணப் பொய்கை யில் தாமரைமலர் படுக்கையிலிருந்த முருகனை ஆறு

கார்த்திகைப் பெண்கள் எடுத்து வளர்த்தமை, முருக னுடைய வேலானது, அவன் வளரும் மலையினைச் சூழவரும் சூரனின் நெஞ்சைப் பிளந்து அழித்த நெடு வேல் என்று புகழ்ந்து குறமகளிர் பாடுகின்றனர்.

> "சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மா ரறுவர்
> திருமுலைப்பா லுண்டான் திருக்கைவே லன்றே
> வருதிகிரி கோலவுணன் மார்பம் பிளந்து
> குருகுபெயர்க் குன்றம் கொன்ற நெடுவேலே"[115]

இவ்வாறு முருகனைப் புகழ்ந்து பாடியவர்கள், கடைசி யில் தமக்குச் சிறந்த கணவன் கிடைக்க அருள்புரிய வேண்டும் என்று வேண்டி விழா கொண்டாடி னார்கள்.

மேற்கூறிய கருத்துகளில் இருந்து குறமக்கள் தமக்கு இன்னல் வரும்போதும், சில அபூர்வக் காட்சிகள் காணும் போதும் முருகனை வேண்டி, ஒன்று கூடி விழா கொண்டாடுவர். முடிவில் 'தம்குல இளம் மகளிர் தமக்கு நல்ல கணவன் கிடைக்க வேண்டும் என்று வேண்டுவர்.'[116] காமனை நோக்கி தங்களுக்கு நல்ல கணவன் கிடைக்க வேண்டும் என்று பெண்கள் வேண்டுவது போன்று குறமகளிர் முருகனை நோக்கி வேண்டி குரவைக் கூத்தாடி விழா எடுத்தனர் என்பதை அறியலாம்.

### திருமால் விழா

திருமாலைப் பற்றியும், அவன் ஆடிய கூத்துகள் குறித்தும், ஆயமகளிர் கொண்டாடிய விழா குறித்தும் ஆயலாம்.

### திருமால்

திருமால் வைணவர்களின் தெய்வம், மும்மூர்த்தி களில் ஒருவன். திருமகளின் கணவன். சங்கு, சக்கரம் முதலியன உடையவன், சங்கின் பெயர் 'பாஞ்ச ஜன்யம்'; உடைவாளின் பெயர் 'நந்தகம்'; வில்லின்

பெயர் 'சாரங்கம்'; கதாயுதத்தின் பெயர் 'கௌமோத கம்' ஆகும். திருமால் திருபாற்கடலில் ஆயிரம் தலையை உடைய ஆதிசேடன் மீது பள்ளி கொண்டவன். நீல நிறம் உடையவன் என்பதை

"மண்ணுறு திருமேனி புரையு மேனி"[137]

என்றும்

"மயில் எருத்து உறழ்மேனி மாயவன் வலத்துளாள்"[138]

என்றும் இவ்வரிகள் உணர்த்துகின்றன.

உலக ஊழின் முடிவில் திருமால் உலகை உண்டு ஆலிலை மேல் துயின்றான் என்று புறநானூறு கூறு கிறது[139].

### திருமாலின் வேறு பெயர்கள்

திருமாலை, அஞ்சன வண்ணன்[140], அறிதுயில் அமர்ந்தோன்[141], இலங்கை அழித்த சேவகன்[142], கடல் வணன்[143], கோகுலம் மேய்த்தவன்[144], செங்கண் நெடி யோன்[145], குருத்து ஒசித்தான்[146], நீனிலம் கடந்த நெடி முடி யண்ணல்[147], நாராயணன்[148], திரு அமர் மார்பன்[149], நீணிலம் அளந்தோன்[150], நெடியோன்[151], நெடுமால்[152], புள்ளூர் கடவுள்[153], மணிவண்ணன்[154], மலர்க்கமல உந்தியான்[155], மாயவன்[156], வையமளந்தான்[157], மலை மிசை நின்றோன்[158], மலையத்து உயர்ந்தோன்[159], முதலிய பல பெயர்கள் சிலம்பில் வருகின்றன.

### திருமால் கோட்டங்கள்

திருமாலுக்கு பல கோயில்கள் இருந்தன. அவைகள் முறையே, பூம்புகாரில் கோயில் இருந்ததை

"கணிகிள ராவின் அறிதுயில் அமர்ந்த
மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக் கழிந்து"[160]

என்றும்

"புகார் வெள்ளை நாகர்தம் கோட்டம்"[161]
"நீலமேனி நெடியோன் கோயில்"[162]

என்றும் இவ்வரிகள் உணர்த்துகின்றன.

மதுரையில் கோயில் இருந்ததை

"உவணச் சேவல் உயர்ந்தோன் நியமமும்
மேழிவலன் உயர்ந்த வெள்ளை நகரமும்"[163]

இப்பாடல் மூலம் அறியலாம். இதற்கு அடியார்க்கு நல்லார்.

"உவணப்புட்சேவலைப் பாதகையாக
வுயர்ந்த திருமால் கோயிலும்"[164]

என்று உரை கூறுகின்றார். இதிலிருந்து அறிவது மற்ற கோயில்களில் இருந்து வேறுபடுத்தவே திருமால் கோயில்களில் உவணச் சேவல் பொருந்திய கொடி களைக் காட்டினர் என தெரியவருகிறது.

திருமால் வழிபாடு சிறந்து விளங்கியது என்பதை அறியலாம்.

கொடி

திருமாலின் வாகனம் கருடன், எனவே அதையே தன் கொடியாக உடையவன் என்பதைச் சிலம்பில்

"புள்ளூர் படவுளைப் போற்றுதும் போற்றுதும்
உள்ளைப் பானியொன் நூற்று"[165]

என்று கூறுகிறது.

திருமால் ஆடிய கூத்துகள்

மாதவி ஆடிய பதினொரு வகை ஆடல்களில் குடம், மல்லன், அல்லி என்ற மூன்று ஆடலும் திருமால் ஆடியது ஆகும்.

குடம்

காமன் மகன் அநிருத்தனைத் தன்மகள் உழை காரணமாக வாணன் சிறை வைக்க அதனால், வாண னுடைய சோவென்னும் நகர வீதியிற் சென்று திருமால் குடங்கொண்டாடியது குடக்கூத்து ஆகும். இதனைப் பின் வரும் பாடல் வரியின் மூலம் அறியலாம்.

"வாணன் பேரூர் மறுகிடை நடந்து
நீணில மளந்தோ னாடிய குடமும்"[159]

அல்லி

கார்நிற வண்ணனாகிய திருமால் ஆடிய ஆடல் களுள், கஞ்சன் வஞ்சத்தால் வந்த யானையின் கொம் பினை ஒடிப்பதற்கு எதிர்நின்று ஆடியது அல்லியத் தொகுதியென்னும் கூத்து இதனை சிலம்பில்

"கஞ்சன் வஞ்சங் கடத்தற் காக
அஞ்சன வண்ண னாடிய வாடலுள்
அல்லித் தொகுதியு... ..."[161]

இவ்வாறு கூறுகிறது.

மல்லன்

வாணனை வெல்வதற்காகக் கண்ணன் மல்ல னாய்ச் சென்று அவனைச் சேர்ந்த அளவிலே சடங் காகப் பிடித்து உயிர்போக ஆடியது மல்லன் கூத்தாகும்[162].

திருமால் விழா

விடியற் காலையில் தயிர்க்கடைய எழுந்த மாதரி சில தீய நிமித்தங்களான குடத்திலிட்டு வைத்த பால் உறையாமை, காளையின் கண்களில் நீர் சொரிந்தமை, உறியில் வைத்திருந்த வெண்ணெய் உருகாமை, துள்ளி விளையாடும் ஆட்டுக் குட்டிகள் முடங்கிக் கிடந்தமை,

பசுக்களின் கழுத்தில் கட்டிய மணிகள் தானே அறுந்து வீழ்ந்தமை ஆகியவற்றைக் காண்கிறாள் என்பதை

"குடப்பால் உறையா குவியிமில் ஏற்றின்
மடக்கணீர் சோரும் வருவதொன் றுண்டு;
உறுநறு வெண்ணெய் உருகா உருகும்;
மறிதெறித் தாடா வருவதொன் றுண்டு;
நான்முலை யாயம் நடுங்குபு நின்றிரங்கும்
மான்மணி வீழும் வருவதொன் றுண்டு"[169]

இப்பாடல் வாயிலாக அறியலாம்.

இவற்றைக் கண்ட மாதரி, தங்கள் மாடுகளுக்குத் தீமை ஏற்படப் போகிறது என்று, அதனைப் போக்கத் தம் குலதெய்வமான கண்ணனை வேண்டி ஆயர்குலக் கன்னியர்கள் குரவை கூத்தாடும் போது, திருமால் உலகளந்த செய்தி; கண்ணன் பிறப்பு வளர்ப்பு வரலாறு; கடல் கடைந்தமை, கம்சனை வென்ற நிலை; கண்ணன் அர்ச்சுனனுக்கு உதவியமை; பாண்டவர் களுக்கு தூது சென்ற வரலாறு இவ்வாறு புகழ்ந்து பாடிய பின் கருநிறமுடையவனைக் காணாத கண்கள் என்ன கண்களோ, 'நாராயண' என்று கூறாத நா என்ன நாவோ என்றெல்லாம் திருமாலைப் போற்றிப் புகழ்ந்து முடிவில் தம் பசுக்களுக்கு நேர்ந்த துய ரங்களை நீக்குமாறு

"கோத்த குரவையுள் ஏத்திய தெய்வநம்
ஆத்தலைப் பட்ட துயர்தீர்க்க ..."[170]

வேண்டி ஆடிப்பாடி விழா கொண்டாடினர். இந்திர விழாவின் போதும் திருமால் கோயிலில் விழா நடை பெற்றது.[171]

## பிற விழாக்கள்

சிலம்பில் பிறவிழாக்களாக அந்தி விழா, நீர் அணி விழா, நெடுந்தேர் விழா, முதலிய விழாக்கள் வரு கின்றன அவைகளைப் பற்றி ஆயபெறுகிறது.

### அந்தி விழா

அந்தி விழா என்பதற்கு அதன் பெயரில் இருந்தே பொருள் விளங்குகிறது. 'அந்தி' என்பதற்கு 'மாலை' என்று பொருள். மாலைக் காலத்தில் நடக்கும் ஒரு விழாவகும்,

நாள்தோறும் மாலைக் காலத்தில் கோயில்களில் மந்திரம் ஓதி வேள்வி செய்வர். அக்கோயில்களில் நாள் தோறும் மக்கள் சென்று கடவுளை வழிபடுவர். மகளிர் தம் வீடுகளில் நெல்லும் மலரும், தூவி விளக் கேற்றுவர். அந்நேரத்தில் முரசுகள், முழங்க மாலைக் காலங்களில் விழா கொண்டாடினர்.[172]

### நீர் அணி விழா, நெடுந்தேர் விழா

அமன் சமயத்து ஐவகைச் சான்றோர் வாழும் ஐந்து தெருக்கள் வந்துகூடும் இடமான பெரிய மன்றத்தே அருகன் ஆணையால் பொற்பூக்களுடைய அசோகமரத்தின் நிழலில் அருகக் கடவுளை நீரினால் நீராட்டும் விழாவே நீர் அணி விழாவாகும். நீராட்டிய அருகக் கடவுளை அழகு செய்து விழாக் கொண்டாடுவர். அக்காலத்தில் நெடியதேரை இழுத்தும் கொண்டாடுவர். இதனை இளங்கோ வடிகள்

> "ஐவகை நின்ற அருகத் தானத்துச்
> சந்தி யைந்துந் தம்முடன் கூடி
> வந்து தலைமயங்கிய வான்பெரு மன்றத்துப்
> பொலம்பூம் மன்டி நலங்கிளர் கொழுநிழல்
> நீரணி விழவினு நெடுந்தேர் விழாவினாஞ்"[173]

இவ்வாறு கூறுகிறார்.

இவ்வாறு பல சமய விழாக்கள் சிலப்பதிகாரக் காலத்தில் இனிதே நடைப்பெற்றது. அதைக் கண்டும், கொண்டாடியும் மக்கள் இன்புற்றனர்.

முடிவுரை

இந்திர விழாவின் போது பிறதெய்வங்களான முருகன், திருமால், முதலியோர் கோயில்களிலும், வேறுவேறு கடவுள்களின் கோயில்களிலும் விழா நடைபெற்றன. அறவோர் பள்ளிகளிலும், புண்ணிய இடங்களிலும் சொற்பொழிவுகள் நடத்தி கொண் டாடியமையால் இந்திர விழா ஒரு பொது விழாவாகவே காட்சி அளிக்கிறது.

இந்திர விழாவின் போது சிறைப்பட்ட மன்னர் களை விடுதலைச் செய்தனர். ஆண்கள் விழாக் காலத்தில் இன்பமாக வீதியில் செல்லும் பரத்தையரைக் கண்டு பலவாறு புலம்பினர்.

காமன் குறித்தும் அவனுடைய படைகள், கோட்டம் பற்றியும் அக்கோட்டத்தை வணங்கினால் அடையும் பயன் குறித்தும் இடம் பெற்றுள்ளன.

சக்தியை வழிபடுவோர் சாக்தர். இங்குக் கொற்றவை சக்தியாக இருக்கிறாள். கொற்றவை சிவனோடும், திருமாலோடும் ஒற்றுமை கொண்டவள், வேட்டுவர் அவளை வணங்கி விழா கொண்டாடியதை அறியலாம்.

கொற்றவையைச் சங்க காலத்தில் வெற்றித் தெய்வமாகவே வழிப்பட்டனர்.

முருகனுக்குச் செவ்வேள், ஆலமரின் செல்வனின் புதல்வன் முதலிய பல பெயர்களுண்டு; ஆறுமுகமும் பன்னிரண்டு கையும் கொண்டவன். அவனுக்குப் பல கோட்டங்கள் இருந்தன.

முருகன் ஆடிய ஆடல்களான துடி, குடை ஆகியனப் பற்றிச் சிலம்பில் குறிப்பு வருகின்றன. குறவர் கொண்டாடிய விழாக் குறித்தும் செய்தி வந்துள்ளது.

ஆயமகளிர் திருமாலுக்கு விழா கொண்டாடும் போது, கண்ணன் பாண்டவர்க்குத் தூது சென்ற வரலாறு, கஞ்சனை வென்றகதை, உலகுண்ட கதை, முதலியன இடம்பெற்றுள்ளன.

மாலைக் காலத்தில் கோயில்களில் விழாக் கொண்டாடினர். அப்போது நெல், மலர், தூவி கொண்டாடினர் என்ற செய்தி புலப்படுகிறது.

அருக கடவுளை நீராட்டி அழகு செய்து விழா கொண்டாடினர். அப்போது நெடுந்தேர் இழுத்து விழாக் கொண்டாடினர்.

## குறிப்பெண் விளக்கம்

1. த. அகர முதல்வன், "சங்க இலக்கியத்தில் இந்திரன் வழிபாடு", *ஆய்வுக் கோவை*, 12:1. ப. 1–4.
2. தொல். பொருள். நூ. 5.
3. 1. தொல். பொருள். நூ. 5, நச்சினார்க்கினியர் உரை, ப. 11.
   2. தொல். பொருள். நூ. 5, இளம்பூரணார் உரை. ப. 11
4. மயிலை சீனி வெங்கடசாமி, "பழந்தமிழும் பல்வகைச் சமயமும்", *பல்கலைப் பழந்தமிழ்*, ப. 27.
5. சிங்காரவேலு முதலியார், *அபிதான சிந்தாமணி*, ப. 154.
6. Benjamin walker *HINDU WORLD* An encyclopedic, Survey of Hinduism, Vol. 1, P. 481.
7. சிங்காரவேலு முதலியார், மு. நூ., ப. 154.
8. *கலைக் களஞ்சியம்* — தொகுதி-1, ப. 723.
9. *சிலப்பதிகாரம், அரும்பதவுரையும், அடியார்க்கு நல்லாருரையும்*, ப. 186.
10. Benjamin walker, OP. Cit., P. 481.
11. பிங்கல முனிவர், *பிங்கல நிகண்டு*, நூ. 160, ப. 37.
12. *சிலம்பு*. பதி. 6, 23: 197.

13. சிலம்பு. 23:50.
14. சிலம்பு. 6:27.
15. சிலம்பு. 6:20, 14:68.
16. சிலம்பு. 5:66.
17. சிலம்பு. 5:240, 11:99, 29. பா. 16.
18. சிலம்பு. 24:பா. 9.
19. சிலம்பு. 6:73.
20. சிலம்பு. 11:24.
21. சிலம்பு. 5:168.
22. சிலம்பு. 5:173.
23. சிலம்பு. பதி. 67, 3:2, 11:154, 15:32, 16:173, 24:பா. 2, 26:94, 27:92.
24. சிங்காரவேலு முதலியார், மு. நு., ப. 154.
25. சிலம்பு. 23:50.
26. சிலம்பு. 17:பா. 38. வரி. 6.
27. சிலம்பு. 5:143,
28. சிலம்பு. 5:145.
29. ந. சாந்தா ஆப்தே, "சிலம்பில் சமயம்", தெஞ்சை அள்ளும் சிலம்பு, ப. 142.
30. சிலம்பு. 5;66-67, அ. ந. 2., ப. 174 (185)
31. அ. ந. 2., ப. 172.
32. மணிமேகலை மூலமும், அரும்பதவுரையும், உ. வே. சாமிநாதையர் ஆராய்ச்சிக் குறிப்பு, ப. 413.
33. சிலம்பு. 5:141-146.
34. சிலம்பு. 5:66-67.
35. சிலம்பு. 5:65.
36. சிலம்பு. 5:73-74.
37. சிலம்பு. 5:86:87.
38. சிலம்பு. 5: 100-109.
39. சிலம்பு. 5:115:140.

40. சிலம்பு. 2:47-48.
41. சிலம்பு. 9:9, 5:141.
42. சிலம்பு. 5:143.
43. சிலம்பு. 5. 146.
44. சிலம்பு. 5. 173.
45. அ. ந. உ., ப. 167.
46. அ. ந. உ., ப. 166.
47. சிலம்பு. 5:166-168.
48 சிலம்பு. 5:168-169.
49. அ. ந. உ., ப. 167.
50. சிலம்பு. 5:150-156.
51. சிலம்பு. 5:179-181.
52. சிலம்பு. 5:182-183.
53. சிலம்பு. 5:210-211.
54. சிலம்பு. 6:35-68.
55. Maria Leach (Ed), *A Standard Dictionary of Folklore Mythology and Legends*, Vol. III, p. 569.
56. சிங்காரவேலு முதலியார், மு. நூ., ப.1280.
57. கலைக்களஞ்சியம் தொகுதி-3, ப. 513.
58. கோவி. இராசகோபால், காமன் கதைப் பாடல் - ஓர் ஆய்வு, ப. 109.
59. Maria Leach, Op. Cit., p. 569.
60. பிங்கல முனிவர், பிங்கல நிகண்டு, நூ. 145, ப. 33.
61. R. N. Saletore, *Encyclopaedia of Indian Culture.*, Vol. II, pp. 662-663.
62. சிலம்பு. 6:57, 7:பா. 11, 10:196.
63. சிலம்பு. 9:60.
64. சிலம்பு. 15:102.
65. சிலம்பு. 28:42.
66. சிலம்பு. 28:19, 7:பா. 37.

67. சிலம்பு 4:83, 8:10.
68. சிலம்பு: 8:6.
69. சிலம்பு. 2:44, 5:244. 14:36, 30:25.
70: சிலம்பு. 28:42.
71. சிலம்பு. 10:28.
72. சிலம்பு. 5:202.
73. சிலம்பு. 2:44, 4:82, 30:25.
74. சிலம்பு. 8:62, 28:19-20.
75. சிலம்பு. 2:24.
76. சிலம்பு. 4:83, 5:210, 28:19, 7:37, 8:10.
77. சிலம்பு. 8:10.
78. சிலம்பு. 8:9.
79. சிங்காரவேலு முதலியார், மு. நூ., ப. 1280.
80. கலி. 109:19-20.
81. சிலம்பு. 9:59-62.
82. ஆண்டாள், "நாச்சியார் திருமொழி", நாலாயிர திவ்ய பிரபந்தம், பா. 1.
83. பெருங்கதை, மகத காண்டம், புறத்தொடுங்கியது, வரி. 58-59.
84. சீவக சிந்தாமணி, பா. 2003.
85. கலி. 109:19-20.
86. Seethalakshmi, *Papers on Tamil Studies*, P. 219.
87. க. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 78.
88. சிலம்பு. 14:111-112.
89. இந்து வரதன், "தமிழ் இலக்கியத்தில் காமன் வழிபாடு", ஒன்பதாவது க. ஆ. கோ., ப. 74.
90. மயிலை சீனி வேங்கடசாமி, மு. நூ., ப. 4.
91. மேற்படி, ப. 4.
92. சிலம்பு. 11.64-66.
93. கு. முத்துராசன், சங்க காலம், ப. 432.

94. சிலம்பு: 12:பா. 5. வரி- 1, 12:பா. 14. வரி. 4, 20:36, 23: 11, 23:181.
95. திருமுரு. 258.
96. நெடுநல்வாடை, நச்சினார்க்கினியர் உரை, அடி 168க்கு
97. தொல். பொருள். புறம். நூ. 4.
98. திருமுரு. 250.
99. பதிற். 90:19.
100. குறு. 218:1-2.
101. சிலம்பு. 12:பா. 1. வரி. 67-71.
102. சிலம்பு. 12:பா. 1. வரி. 16.
103. சிலம்பு. 6:59.
104. சிலம்பு. 12. பா. 13.
105. சிலம்பு. 11-214.
106. சிலம்பு. 12:55.
107. சிலம்பு. 12:பா. 21, வரி. 3-4.
108. சிலம்பு: 12:57.
109. சிலம்பு. 12:பா. 1. வரி. 61-62.
110. சிலம்பு. 12:26-27.
111. சிலம்பு. 12:63.
112. சிலம்பு. 12:பா. 9. வரி. 1.
113. சிலம்பு. 12. பா. 11. வரி. 4:
114. சிலம்பு. 12:4.
115. சிலம்பு. 23. 108.
116. சிலம்பு. 23:181.
117. சிலம்பு. 12:55-56.
118. சிலம்பு. 12:32-35.
119. சிலம்பு. 12:36-44.
120. கிருபானந்தவாரியார், முருகன் காட்சி, முன்னுரை. ii.
121. சி. பாலசுப்பிரமணியன், முருகன் காட்சி, ப. 13.
122. ந. சி. கந்தையா பிள்ளை, தமிழகம், ப. 160.

123. சிலம்பு. 5:170, 24: பா.17, 2:49, 24:பா. 10, வரி. 4, 24:பா. 13 வரி. 15, 24:பா. 11, 24: பா. 16, 6:51.

124. சிலம்பு. 24:பா. 9 வரி. 1.

125. சிலம்பு. 24:பா. 9, வரி. 3.

126. சிலம்பு. 14:16.

127. சிலம்பு. 24: பா. 13, வரி. 4.

128. சிலம்பு. 23: 188-190.

129. சிலம்பு. 29:பா. 10, வரி. 3.

130. சிலம்பு. 14:10, 9:11.

131. சிலம்பு. 5:170.

132. சிலம்பு. — 6:49-51.

133. சிலம்பு. 6:52-53.

134. சிலம்பு. 24:பா. 9.

135. சிலம்பு. 24:பா. 10.

136. சிலம்பு. 24:பா. 18: வரி. 4.

137. புறம். 56:5.

138. சிலம்பு. 17:பா. 27. வரி. 1.

139. புறம். 198.9.

140. சிலம்பு. 6:47.

141. சிலம்பு. 26:62.

142. சிலம்பு. 17:பா. 35.

143. சிலம்பு. 26:238.

144. சிலம்பு. 17:பா. 29.

145. சிலம்பு. 11:51.

146. சிலம்பு. 17:பா. 17, 21, 29.

147. சிலம்பு. 11:148.

148. சிலம்பு. 17:பா. 37.

149. சிலம்பு. 11:40.

150. சிலம்பு. 6:55.

151. சிலம்பு. 5:172, 8:1, 22:61, 25:21.

152. சிலம்பு. 18:4.
153. சிலம்பு. 17.பா. 28.
154. சிலம்பு. 10:10.
155. சிலம்பு. 17:பா. 32.
156. சிலம்பு. 17:பா. 5, வரி. 14-16, 19–21, 28.
157. சிலம்பு. 17:பா. 16.
158. சிலம்பு. 11:33,
159. சிலம்பு. 11:105.
160. சிலம்பு. 10:9–10.
161. சிலம்பு. 9:10.
162. சிலம்பு. 5:172.
163. சிலம்பு. 14;8-9.
164. அ.ந.உ., ப. 366.
165. சிலம்பு. 17:பா. 28. வரி. 6–7.
166. சிலம்பு. 6:54–55.
167. சிலம்பு. 6:46–48.
168. சிலம்பு. 6:68–69.
169. சிலம்பு. 17:பா.2, 3, 4.
170. சிலம்பு. 17: பா. 38. வரி. 2–3.
171. சிலம்பு. 5:72.
172. சிலம்பு. 22:147–150.
173. சிலம்பு. 10:18:22.

# இயல்-4

# சிலம்பில் சமுதாய விழாக்கள்

### சிலம்பில் சமுதாய விழாக்கள்

"மக்கள் இணைந்து வாழும் வாழ்வு சமூக அமைப்பை உருவாக்குகின்றது".[1] இச்சமுதாய மக்கள், சமயத் தொடர்பற்ற பல விழாக்களைக் கொண்டாடுகின்றனர். அத்தகைய விழாக்களே சமுதாய விழாக்கள் ஆகும். சிலப்பதிகாரத்தில் என்ன என்ன சமுதாய விழாக்கள் கொண்டாடினர் என்பவை இங்கு ஆயப்பெறுகிறது.

### பிறந்தநாள் விழா

சேரன் செங்குட்டுவன் தனது பிறந்த நாளைக் கொண்டாடியமைப் பற்றிய குறிப்பு சிலம்பில் வருகிறது. பிறந்தநாளைக் கொண்டாடும் வழக்கம் பண்டைய காலத்திலிருந்தே வருகிறது.[2] பிறந்தநாளை இளங்கோ வடிகள் 'வெள்ளணி நாள்' என்று கூறுகிறார்.[3] வெள்ளணி என்பதற்கு நச்சினார்க்கினியர் 'மங்கல வண்ணமாகிய வெள்ளணியும் அணிந்து எவ்வுயிர்க் கண்ணும் அருளே நிகழ்தலின் அதனை வெள்ளணி என்க"[4] என்று விளக்கம் கூறுகிறார். இதன் வாயி லாகப் பிறந்தநாள் அன்று வெண்மையான ஆடை களை உடுத்துக் கொண்டாடுவர் என்பது புலப்படு கிறது. இன்றைய நாட்களிலும் ஒருசிலர் வெண்ணிற ஆடை உடுத்திக் கொண்டு கொண்டாடுகின்றனர். மனமகிழ்ச்சியை வெளிப்படுத்த வெள்ளாடை உடுத்து வது போல், துக்கத்தை தெரிவிக்கும் வண்ணம் கறுப்பு

ஆடைகள் அணிவதை இன்றைய நாட்களில் காணலாம்.

செங்குட்டுவன் பிறந்தநாளை முன்னிட்டுத் தன்னிடம் போரில் தோற்றுச் சிறையில் இருக்கும் வேற்று நாட்டு மன்னர்களின் விலங்குகள் அகற்றப் பட்டன என்பதனை.

"படுநுகம் பூணாய் பகடே மன்னர்
அடித்தளை நீக்கும் வெள்ளணி யாமெனும்"[5]

இவ்வரிகள் தெரிவிக்கின்றன. அடுத்து மாடுகள் உழுதல் இன்றி இன்புற்று இருந்தன. மக்களுக்கும் குறுநில மன்னர்களுக்கும் வரி விலக்கு அளிக்கப் பட்டன. எனவே மக்களும் மன்னர்களும் இன்புற்று, பிறந்தநாள் விழாவில் கலந்துகொண்டு சிறப்பாகக் கொண்டாடினர்.

போர்க்களத்தில் பகைவரை அழித்து வெற்றிப் பெற்ற போர் வீரர்களுக்கு மன்னன் தனது பிறந்தநாள் அன்று பொன்னால் செய்த வாகைப் பூமாலையினைப் பரிசாகக் கொடுத்துப் போர் வீரர்களைப் பாராட்டினார் என்பதை இளங்கோவடிகள்.

"கூற்றுக்கண் ணோட் வரிந்துகளங் கொண்டோர்
நிறஞ்சிதை கவயமொறி நிறப்புண் கூர்ந்து
புறம்பெற வந்த போர்வான் மறவர்
வருக தாமென வாகைப் பொலந்தோடு
பெருநா மையம் பிறக்கிடக் கொடுத்து"[6]

இந்தப் பாடல் வாயிலாகக் கூறுகிறார்.

மேற்கூறிய சான்றுகளிலிருந்து சிலப்பதிகாரக் காலத்தில் மன்னர் பிறந்த நாளை எவ்வாறு கொண்டா டினர் என்பதையும், மன்னன் தன் பிறந்த நாளில் தான் மட்டும் இன்பம் அடையாமல் தனது ஆட்சியின் கீழ் வாழும் மாக்களும், மக்களும், மன்னர்களும் இன்பம்

அடையும் வண்ணம் கொண்டாடினர் என்பது தெரிய வருகிறது.

## பெயர்சூட்டு விழா

சிலம்பில் பெயர்சூட்டு விழாவாக மணிமேகலை பெயர்சூட்டுவிழா வருகிறது. இப்பெயர்சூட்டு விழா பின்நோக்கு உத்தியின் மூலம், மாடலன் வாய்வழியாக உணர்த்துகிறார் இளங்கோவடிகள்.

மாதவி பெற்றெடுத்த மகளுக்கு நல்ல பெயர் ஒன்று இடுக என கணிகையர்கள் கோவலனைக் கேட்க தன் முன்னோர்களைக் காப்பாற்றிய மணிமேகலை தெய்வத்தின் பெயரை இடுக என்றான். மேகலை அணிந்த ஆயிரங் கணிகையர் ஒன்றுகூடி நின்று மணி மேகலை என்று பெயரிட்டுக் கொண்டாடினர். அப்போது கோவலனும், மாதவியும் பொன்னையும் பொருளையும் இரவலர்க்கு வழங்கினார்கள் என்பதை

> "துன்ப நீங்கித் துயர்க்கட லொழிகென
> விஞ்சையிற் பெயர்த்து விழுமந் தீர்த்த
> எங்குல தெய்வப் பெயரீங் கிடுகென
> அணிமே கலைய ராயிரங் கணிகையர்
> மணிமே கலையென வாழ்த்திய ஞான்று
> மங்கல மடந்தை மாதவி தன்னொடு
> செம்பொன் மாரி செங்கையிற் பொழிய"[1]

இப்பாடல் உணர்த்துகிறது.

பெயர்சூட்டும் விழாவில் மக்களுக்கு பொருள்கள் வழங்கும் வழக்கம் இருந்தது என்பதை மணிமேகலை பெயர்சூட்டு விழாவின் மூலம் அறியலாம்.

## அரங்கேற்ற விழா

"கலை என்பது உணர்வின் வெளிப்பாடு; அது உணர்வை வெளியிடுவதுடன் பிறக்கும் அவ்வுணர்வை ஊட்டும் பெருமையுடையது என்று டால்ஸ்டாய்"[2] கூறுகிறார். இக்கூற்றுக்கு ஏற்ப மாதவி தன் உள்ள

உணர்வினை நாட்டியம் மூலம் வெளிப்படுத்தி மக்களை இன்ப வெள்ளத்தில் திளைக்கச் செய்தாள். இவ்வாறு ஆடல், பாடல், கலையில் சிறந்து விளங்கிய மாதவியின் முற்பிறப்பு வரலாறு, அவளுடைய ஆசிரியர்களின் சிறப்பு, அரங்கின் அமைப்பு, தலைக் கோல் ஆகியவைப் பற்றியும் இங்கு விளக்கபெறுகிறது.

### மாதவி வரலாறு

அகத்திய முனிவர் இந்திர உலகத்திற்கு வரவே, அவரை மகிழ்விக்கும் வண்ணம் ஆடல், பாடல், அழகு என்ற மூன்றிலும் சிறந்து விளங்கிய உருப்பசியின் ஆடல் நடைபெற்றது. ஆடலிடையே உருப்பசி சயந்தன் இருவரின் கண்களும் காதல் கொண்டன. அதனால் அவளால் இசைக்கருவிகளுக்கேற்ப ஆடவும் பாடவும் முடியாமல் திணறுவதைக் கண்ட முனிவர் கோபம் கொண்டு உருப்பசி நீ மண்ணுலகில் மாதவி யாகப் பிறப்பாய் என்றும் சயந்தனைப் பார்த்து நீ மூங்கிலாய்த் தோன்றுவாய் என்றும் சாபமிட்டார். சயந்தன் வேண்டுதலுக்கு ஏற்ப, மாதவி தலை அரங் கேற்றும் போது அவளுக்குத் தலைக்கோலாகி பிறகு சாபம் நீங்கும் என்று சாபம் இட்டார். இதனால் மாதவி ஆடல் மகளான சித்திராபதியின் மகளாகப் பிறந்தாள்.[9]

### மாதவி கலை பயிறல்

மாதவி ஆடல், பாடல், கலை ஆகிய மூன்றினை யும் குறையின்றி ஏழாண்டுக் காலம் பயின்றாள். பன்னிரண்டாண்டு நிரம்பியவுடன் சோழ மன்னன் சபையில் அரங்கேற்ற வேண்டும் என்று மாதவியின் தாயான சித்திராபதி நினைத்தாள் என்பதை

> "ஆடலும் பாடலு மழகு மென்றிக்
> கூறிய மூன்றி னொன்றுகுறை படாமல்
> ஏழாண் டியற்றியோ ரீரா ணாண்டிற்
> சூழ்கழன் மன்னற்குக் காட்டல் வேண்டி"[10]

இப்பாடல் வாயிலாக அறியலாம்.

## ஆடல் ஆசிரியன் அமைதி

இருவகைக் கூத்தான அகக்கூத்து, புறக்கூத்து ஆகியவற்றின் இலக்கணங்களை அறிந்து பலவகை யான நடனங்களின் விலக்குறுப்புக்களை விளக்கமாக அறிந்தவன்; அல்லி முதற்கொண்டு கொடுகொட்டி ஈறான பதினோர் ஆடலும்[11] பாடலும் தாளங்களும் தாளங்களின் வழிவந்த தூக்குகளும் முறையே நெறிப் பட நிகழ்வித்தலில் அவன் வல்லவன். பிண்டி, பிணையல், எழிற்கை, தொழிற்கை என்று சொல்லப் படும் அபிநய வகைகளை முறையே அறிந்தவன். பிண்டி செய்த கை ஆடலிற் களைதலும், ஆடல் செய்த கை பிண்டியிற் களைதலும் அவற்றுள் ஒன்றுடன் ஒன்று விரவாதபடி பார்த்துக் கொள்வதில் வல்லவன்.[12] இவ்வாறு ஆடலுக்கு வேண்டிய எல்லாத் தகுதிகளை யும் உடையவன் மாதவியின் ஆடல் ஆசிரியன்.

## இசையோன் அமைதி

யாழ், குழல் ஆகிய இசைகளும், தாளக் கூறுபாடு களும் மிடற்றுப் பாடலும் தாழ்ந்த குரல் எழுப்பும் தண்ணுமையும் ஆகிய இசைகளை கூத்திற்கு ஏற்ப வாசிக்க வல்லவன். இதனை

> "யாழுங் குழலுஞ் சீரு மிடறும்
> தாழ்குரற் றண்ணுமை யாடலொ டிவற்றின்
> இசைந்த பாட லிசையுடன் படுத்து"[13]

இப்பாடல் வாயிலாக அறியலாம். நான்குவகை சொற் களான இயற்சொல், திசைச்சொல், திரிச்சொல், வட சொல் ஆகிய சொற்களின் ஓசையை நன்கு தெரிந் தவன். இன்ன பாடலுக்கு இது பொருத்தமாகச் சேரும் என்ற நிலையை நன்கு அறிந்தவனாகிய இசைப் புலவன் மாதவிக்கு இசை ஆசிரியனாக அமைந்தான்.

## கவிஞன் அமைதி

தமிழ் மக்கள் அனைவரும் பொருள் அறியும் வண்ணம் தமிழ்மொழியின் அமைவு முழுவதும் அறிந்த

தன்மையுடைய கவிஞன்; நல்ல நாட்டிய கலை நூல் களைக் கற்ற இசையாசிரியரின் இசைக்கு சிறிதேனும் பிறழாமல் இனிய சொற்களால் கவியியற்றும் புலமை பெற்ற இக்கவிஞன் மாதவிக்கு ஆசிரியனாக இருந் தான்[14]

## தண்ணுமையோன் அமைதி

ஆடல், பாடல், இசை, தமிழ், பண், பாணி, தூக்கு, முடம், தேசிகம் ஆகியவற்றை குற்றமற உணர்ந்தவன். பின்பாட்டுக் கேற்பவும் யாழ், குழல் முதலிய இசைக்கு ஏற்றவாறும் இவன் வாசிப்பவன். கூத்திற்கு ஏற்ப நூனிவிரல்களாலே மத்தளத்தை இதமாக வாசிப் பவன். பிற இசை கருவிகளின் இசை இனிது கேட்கு மாறு தன் ஒலியை மிகாமலும் சிதைவின்றியும் வாசிக்க வல்லவனான ஆசிரியன் மாதவிக்கு அமைந்து இருந்தான்.

## குழலோன் அமைதி

சித்திரப் புணர்ச்சி, வஞ்சனைப் புணர்ச்சி என்னும் இரண்டு கூற்றினையும் அறிந்தவன் குழலாசிரியன் ஆவான். இவன், பாடல் ஆசிரியனை ஒத்த அறிவினை உடையவன். மற்ற இசையின் இயல்பினுக்கு ஏற்ற வாறு இணைந்து வாசிக்க வல்லவன். பாடலினிடத்துச் சொல்நீர்மைகளின் எழுத்துக்கள் சிதையாமல் ஒவ் வோர் எழுத்துமாக வழுவின்றி இசைக்கும் ஆற்றல் உடைய குழலோன் மாதவிக்கு குழல் ஆசிரியனாக அமைந்து இருந்தான்.

## அரங்கின் அமைப்பு

சிற்ப நூல் வல்லுநரால் சொல்லிய நடன அரங்க அமைப்பு இயல்புகளின்படி சிறிதும் பிறழாதவாறு அரங்கு அமைப்பதற்கு நிலக் குற்றங்கள் இல்லாத ஒரு இடத்தை வகுத்துக் கொண்டனர். பொதிகை மலையில் அல்லது அதேபோன்ற புண்ணியமலைகள் ஒன்றில்

உயரமாக வளர்ந்துள்ள மூங்கிலிற் கணுவுக்குக் கணு ஒருசாண் தூரம் இடைவெளி உள்ள மூங்கிலை வெட்டி அதனை உத்தமன் கைப்பெருவிரலில் இருபத்து நான்கு விரல் கொண்டதாக நறுக்குவர்.[15] இதுவே அளவுகோலாகும். இந்த அளவு கோலின்படி ஏழுகோல் அகலமும் எட்டுக்கோல்நீளமும் ஒருகோல் உயரமுமாக நடன அரங்கம் அமைக்கப்பட்டது என்பதை

"நூ னெறி மரபி னரங்க மளக்கும்
கோலள விருபத்து நால்விர லாக
ஏழுகோ லகலத் தெண்கோ னீளத்
தொருகோ லுயரத் துறுப்பின தாகி"[16]

இவ்வரிகள் மூலம் அறியலாம்.

அரங்கின் நாற்புறமும் தூண்களை நிறுத்தி அவற்றின்மேல் உத்தரப் பலகைகளை பொருத்தினர். உத்தரப் பலகைகளுக்கும் அரங்கின் பலகைகளுக்கும் இடையிலே நான்கு கோல் அளவு இடைவெளி இருந்தது. இத்தகைய அளவுகொண்ட அரங்கிற்கு போவதற்கும் வருவதற்கும் இரண்டு வாயில்கள் அமைக்கப்பட்டிருந்தன. அரங்கில் வச்சிரதேகன், வச்சிரகந்தன், வருகன், இரத்தகேசுவன் என்னும் நால் வகை வருணப்பூதங்களின் உருவங்களை எழுதி உயர்த்தி வைத்தனர். தூண்களின் நிழல் அரங்கத்தில் விழாதவாறு நிலைவிளக்குகளை அரங்கின் நாற்புறங் களிலும் வைத்தனர். அரங்கில் மூன்று விதமான திரை களைத் தொங்கவிட்டனர்.[17] முத்துமாலைகளை நெடு கிலும் தொங்கவிட்டனர்.

இவ்வாறு மாதவி தலையரங்கேறும் அரங்கம் அரிய கைவேலைத் தொழில்கள் சிறக்கக் கவர்ச்சியுடன் சிறப்பாக அமைந்து இருந்தது.

### தலைக்கோல்

தலைக்கோல் என்பது தலை அரங்கேற்றம் முடிந்ததும் மன்னன் மாதவியைப் பாராட்டிக் கொடுக் கும் கோல் ஆகும்.

போர்க்களத்தில் புறமுதுகிட்டோடிய பெரும் புகழுடைய பகையரசருடைய வெண்கொற்றக் குடையின் கொம்பை தலைக்கோலாகத் தேர்ந்தெடுப்பர். அக்கோலின் கணுக்கள் தோறும் நவமணிகளை இழைத்துக் கட்டுவர். கணுக்களுக்கு இடைப்பட்ட பகுதியைச் சாம்பூநதம் என்ற பொன் தகட்டால் கட்டி அதன் பிறகு இந்திரன் மகன் சயந்தனாக இக்கோல் விளங்குக என்று கூறி வழிபாடு செய்வர். இதுவே தலைக்கோல் ஆகும்.[11] இக்கோலை பொற்குடங்களில் கொண்டு வந்த நீரினால் நீராட்டி மலர் மாலைகளைச் சூட்டுவர். நன்னாளில் பட்டத்துயானையின் துதிகையில் கொடுத்து அந்த யானையை ஊர்வலமாக அழைத்து வருவார்கள். அத்துடன் பலவகையான வாத்தியங்கள் ஒலிக்க அரசனும், அவனுடன் ஐம்பெருங் குழுவினரும் தொடர்ந்து வருவார்கள். கடைசியில் கவிஞனின் கையிலே கொடுக்க அவன் அரங்கில் கொண்டு வந்து வைப்பான்.

## மாதவி அரங்கேற்றம்

கலையில், இசையில் சிறந்த ஆசிரியரால் ஏழாண்டிற்குள்ளாகவே எல்லா கலைகளையும் முழுமையாக மாதவி கற்றாள். மாதவி அரங் கேற்றத்தைக் காணவந்த அரசன், அமைச்சர் முதலியோர் அனைவரும் தத்தமக்கென அமைந்த இருக்கைகளிலே அமர்ந்தனர். இசைக் கவிஞர்கள் தம்தம் இடத்திலே ஒழுங்காக அரங்கின் ஒருபால் நினறனர். மாதவி வலது காலை முன்னாக எடுத்து அரங்கிலே வைத்து வலது புறம் சென்று கடவுள் துதிப்பாடல் பாடி மாதவி முதற்கண் ஆடினாள்.[11] அவள் ஆடலுக்கு ஏற்ப எல்லா இசைகளும் ஒருங்கே முழங்கின. மாதவி நாட்டிய நன்னூல் படி நன்கு கடைப்பிடித்து அழகாக ஆடினாள்.

## பட்டம் பெற்றாள்

மாதவி ஆடலைக் கண்டு அனைவரும் மகிழ்ந் தனர். மன்னன் முறைப்படி 'தலைக்கோல்' என்ற

பட்டத்தையும், அத்துடன் தலைக்கோலையும், பச்சை மாலையையும், ஆயிரத்து எட்டு கழஞ்சு பொன்னையும் வழங்கி" மாதவியை கௌரவித்தான்.

இவ்வாறு மாதவி ஆடலில் சிறந்து விளங்கினாள். "கோவலன் மாதவியை நாடி வாழ்வதற்கு முதல் காரணமாக இருந்தது கலையே ஆகும்".[11]

மாதவியின் அரங்கேற்றம் மேற்கூறியவாறு சிறப்பாக நடைபெற்றது.

### திருமண விழா

இன்றைய நாட்களில் மணம் என்றால் நறுமணத்தை குறிக்கிறது. பண்டையக் காலத்தில் மணம் என்பது திருமணத்தையே குறித்தது. திருமணத்தைக் குறிக்க கடி மணம், மன்றல், வதுவை, வரைவு முதலிய சொற்கள் இலக்கியத்தில் பயன்படுத்தி உள்ளனர்.[12] இன்றைய நாட்களில் திருமணம், கல்யாணம் என்று அழைக்கின்றனர்.

"திருமணம் என்பது மனிதனுக்காக மனிதனால் நடத்தப்படும் ஒருவகைச் சடங்கு ஆகும்"[13]. இம்மணம் காலம், இடம், மதம், இனம், அடிப்படையில் வேறுபடுவதுண்டு. பண்டையத்தமிழகத்தில் திருமணம் எதுவும் இன்றி இல்வாழ்க்கை நடத்தினர். பின்னர் மக்களிடையே பொய்யும், வழுவும் தோன்றவே அதை நீக்கும் பொருட்டுப் பெரியோர்கள் சில விதிமுறைகளைப் பின்பற்றினர் என்பதைத் தொல்காப்பியர்,

> "பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
> ஐயர் யத்தனர் கரணம் என்ப"[14]

என்னும் இந்நூற்பாவால் விளக்குகிறார்.

சிலம்பில் கோவலன் கண்ணகி திருமணம் பற்றிய செய்தி மங்கலவாழ்த்துப் பாடலில் வருகிறது. இம்

மணம் எம்முறையில் நடைபெற்றது என்பதை ஆய்வோம்.

கோவலனுக்கு பதினாறு வயதிலும், கண்ணகிக்கு பன்னிரண்டு வயதிலும் திருமணம் செய்ய முற்பட்டனர்.[25] இத்தகைய வரைமுறை சங்க இலக்கியத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. கோவலன் கண்ணகி திருமணம் "களவின் பின் நிகழ்ந்த திருமணம் எனக் காட்ட முயலும் முயற்சி வலிந்து கொள்ளும் முயச்சியே"[26] ஆகும் என்று ப. அருணாசலம் கூறுகிறார். இத்திருமணம் பெற்றோர்கள் விருப்பத்துடன் நடைபெற்றது என்பதனை

> "இருபெருங் குரவரு மொருபெரு நாளான்
> மனவணி காண மகிழ்ந்தனர் ... ..."[27]

என்னும் வரிகள் மூலம் அறியலாம். இவ்வாறு மகிழ்ந்த அளவிலே அழகிய மகளிரை யானையின் மீது அமர்த்தி மணமுறைப் பற்றிய செய்திகளை அந்நகர்க்கு அறிவித்தனர். திருமணத்தின் போது முரசுகள் முழங்கின. மத்தளங்கள் அதிர்ந்தன; வெண்குடை ஊர்வலமாகப் புறப்பட்டது, என முறையே சொல்லி வரும் இளங்கோவடிகள் இறுதியில் "மங்கலவணி யெழுந்தது"[28] என்று கூறுகிறார். இந்த மங்கலவணி என்ன என்பதை ஆய்வோம்.

**மங்கலவணி**

மங்கலவணி என்ற சொல் சங்க இலக்கியங்களில் இல்லை. சிலம்பில்தான் வருகிறது. இந்த மங்கலவணி என்ன என்பதில் கருத்து வேறுபாடு இருந்து வருகிறது. மங்கலவணி என்பதை சிலர் தாலி என்றும்[29] வேறு சிலர் இயற்கை அழகு என்றும்[30] கூறுகின்றனர். சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதிய அரும்பதவுரையாசிரியரும் ஓர் இடத்தில் "மாங்கலிய சூத்திரம்"[31] என்றும், மற்றோர் இடத்தில் "இயற்கை அழகு"[32] என்றும் பொருள் எழுதி இருக்கிறார். ஆகவே இதைப்

பற்றி அவர்க்கே மாறுபட்ட கருத்து இருந்தமை தெரிய வருகிறது.

மங்கலவணி என்பது இயற்கை அழகு ஆகும் என்பதை கீழ்வரும் சான்றுகள் மூலம் அறியலாம்.

கோவலன் கண்ணகி திருமணம் பற்றிக் கூறும் போது

"முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தன மணிலம்
அரசெழுந்ததொர் படியெழுந்தன வகலுண் மங்கல
வணியெழுந்தது"[33]

என்று கூறுகிறார் இளங்கோவடிகள். இவ்விடத்து 'மத்தாளம், முருடு முதலிய ஒலி முழக்கங்கள் ஊர்வலமாக ஊரெங்கும் எழுந்தன. அதனால் ஊரில் எங்கும் இயற்கை அழகு நிறைந்தது (எழுந்தது)'"[34] இவ்வாறு கண்ணதாசன் மங்கலவணி என்பது இயற்கை அழகு என்று கூறுகிறார்.

அடுத்து மனையறம் படுத்த காதையில் கோவலன் கண்ணகியைப் பாராட்டும் போது இயற்கையழகு இருக்கும்போது வேறு சில அணிகளை அணிவது ஏன் என்று கூறுகிறான். இதனைப் பின் வரும் பாடல் வரிகள் வாயிலாகக் காணலாம்.

"நறுமலர்க் கோதை நின் னலம்பா ராட்டுநர்
மறுவின் மங்கல வணியே யன்றியும்
பிறிதணி யணியப் பெற்றதை யெவன்கொல்"[35]

மற்றொரு இடத்தில் கண்ணகியை விட்டு மாதவியிடம் சென்ற கோவலனை எண்ணி வருந்திய நிலையில் அவள் இருந்தாள். அப்போது தன்னைப் பிற அணிகளால் அலங்கரித்துக் கொள்ளாமல் இயற்கை அழகுடன் இருந்தாள் என்று கூறும்போது மங்கலவணி என்ற குறிப்பு வருகிறது. இதற்கு அரும்பதவுரையாசிரியர் 'இயற்கையழகு' ஆகும் என்பதை அறியலாம்.

மங்கலவணி தாலி இல்லை என்பதற்கு சில சான்றுகள் வாயிலாக அறியலாம்.

கோவலன் கண்ணகி திருமணம் பற்றிக் கூறுகையில்

"சாலி யொருமீன் றகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலஞ் செய்வது காண்பார்க் ணோன் பென்னை"[17]

இவ்வாறு வயது முதிர்ந்த பார்ப்பான் மறைவழி காட்டித் தீவலம் வந்து ஒன்று சேர்ந்தனர் என்று கூறும் இடத்தில் தாலியைப் பற்றிக் குறிப்பேதும் இல்லை. தாலி கட்டி யிருப்பின் அதைக் கூறியிருப்பார். அடுத்து, கண்ணகி, கோவலன் இறந்தபிறகு கொற்றவை கோயில் வாயிலில் தன் வளையல்களை உடைத்துவிட்டுச் சென்றாள்.[18] அப்போது தாலி இருக்குமாயின் அதையும் கழற்றினாள் என இளங்கோவடிகள் கூறியிருப்பார். தாலி இல்லாமையால் அதைக் கூறவில்லை என்பது புலப்படுகிறது.

மேற்கூறிய கருத்தை உறுதிசெய்யும் வண்ணம் 'தமிழகத்தில் மணமகளுக்குத் தாலிகட்டும் வழக்கம் கி.பி. பத்தாம் நூற்றாண்டுக்கு முன்பு ஏற்படவில்லை என்பதனை கி.பி. 958ஆம் ஆண்டுக்குரிய கல்வெட்டு தெரிவிக்கிறது'[19] என்று கே. கே. பிள்ளை தமது நூலில் கூறுகிறார்.

இக்கருத்துகளின் வாயிலாக மங்கலவணி என்பது தாலி இல்லை என்பதை அறியலாம். ஆகவே கோவலன் கண்ணகி திருமணம் தமிழர் திருமணம் போன்று தாலியின்றி நடைபெற்றது என்பதை அறியலாம்.

இத்திருமணம் மதியம் சகடணைந்த நல்ல நாளி லேயே நடைபெற்றது. இவ்வழக்கம் சங்க காலத்திலும் இருந்தது என்பதை அகநானூற்றுப் பாடல் ஒன்றின் மூலம் அறியலாம்.

"புள்ளுப்புணர்ந் தினிய வாகத் தெள்ளொளி
அங்க விருவிசும்பு விளங்கத் திங்கட்
சகட மண்டிய துகள்தீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழுவொரு பருஉப்பணை இமிழ
வதுவை மண்ணிய மகளிர்"[46]

மாமுது பார்ப்பனர் மறைவழி காட்ட கோவலன் கண்ணகி தீவலம் வந்து ஒன்று சேர்த்துவைத்தனர். இவர்களை "காதலர் பிரியாமல் கவவுக்கை நெகிழாமல் தீது அறுக"[47] என்று மலர்களைத் தூவி வாழ்த்தினர்.

இதுபோன்று கோவலன் — கண்ணகி திருமணம் பெற்றோர்களால் நிச்சயிக்கப்பட்டு, ஊர்மக்களுக்கு அறிவிக்கப்பட்டு, தாலியின்றி, மாமுது பார்ப்பனர்கள் மறைவழி காட்ட தீவலம் வந்து திருமணம் நடைபெற்றது என்பதை அறியலாம்.

## நடுகல்

உலகளவில் சிறந்து விளங்கும் நடுகல் வழக்கம் தமிழர்களிடம் தொன்றுதொட்டு இருந்து வரும் வழக்கம் என்பதை அக்கால இலக்கியங்கள் மூலம் அறியலாம்.[48] சிலம்பில் கண்ணகிக்கு நடுகல் நட்டமைப் பற்றி ஆறு காதையில் விரிவாக கூறுகிறது.[49] அதைப் பற்றி ஆய்வதே இப்பகுதியின் நோக்கமாகும்.

போரில் வீரமரணம் அடைந்த வீரர்களின் வீரத்தை உலகத்திற்கு அறிவிக்கவும், வீரரின் நினைவாகவும் கல் நடப்பட்டது. இதுவே நடுகல் எனப்படும்.

வீரத்தினைப் போற்றும் பண்பின் அடிப்படையில் தோன்றிய நினைவுச் சின்னம் காலப்போக்கில் ஆவி பற்றிய நம்பிக்கையின்பாற்பட்ட நிலையில் நடுகல் வழிபாடாக உருப்பெற்றது. நடுகல் வழக்கம் தொல்

காப்பியர் காலத்திலிருந்து இன்றுவரை இருந்துவரும் ஒரு வழக்கமாகும்.

### நடுகல் நோக்கம்

நடுகல் நடுவதன் நோக்கம் என்ன எனில் ஒருவன் தன் வாழ் நாட்கள் முடியும் முன்பே இறக்க நேரிடின் அந்த ஆவி மேலுலகம் செல்லாமல் பூமியிலே உலவும் என்று நம்பினர். நடுகல் நட்டால் அக்கல்லில் அந்த ஆவி வந்து தங்கும் என எண்ணியே நடுகல் நட்டு வழிபட்டனர். இதனை உறுதிசெய்யும் வண்ணம் 'பிரேசர் என்ற சமூகமானிடவியல் ஆய்வாளர் போரில் மாண்ட ஆவி சில நாட்களுக்கு உலகில் உலவு வதாகவும், சாவுச் சடங்குகள் கழிந்த பின்னரே வேறுலகு செல்வதாகவும் நம்பினார். சாவுச்சடங்குகள் நிகழ்த்துவதற்குமுன் கல்நாட்டிச் சடங்கு செய்தால் ஆவியின் ஒருபகுதி அங்கு தங்குமெனவும் விழாக் காலங்களில் பழம் பிறப்புணர்வுடைய மேலோர் உலகி லுள்ள ஆவி இக்கல்லுக்கு வரும் என்ற நம்பிக்கையில் வழிப்பட்டனர் என்றும் கூறுகின்றார்'.'' இவ்வாறு மக்கள் நம்பியதால் நடுகல் வழிபாடு சிறந்து விளங்கியது.

இன்றைய நாட்களில் மக்கள் வழிபடும் சில சிறு தெய்வங்கள் நடுகல் வழிவந்தனவே. காட்டாக ''மதுரைவீரன், இருளன், கறுப்பன், நொண்டி'' முதலிய தெய்வங்கள் ஆகும்.

### நடுகற்குரியோர்

சிறந்த செயல் புரிந்து இறந்தவரின் புகழ் உலகில் என்றும் நிலைத்து நிற்கும் வண்ணம் நடுகல் நடுவர். இவ்வாறு நடுகல் நடுவதற்கு என சில விதிமுறைகள் இருந்தன. அம்முறைப்படி நடுகற்க்குரியோர் பின் வருவோர்கள்.

### கறவையினை மீட்டோர்

போர் தொடங்கப்போகும் அரசன் பகைவன் நாட்டிலிருந்து பசுக்களைக் கவர்ந்து வருதல் தமிழர் மரபு. இவ்வாறு கவர்ந்த பசுக்களை மீட்பதற்கு அந் நாட்டு வீரர்கள் எதிர்த்துப் போர் செய்வர். இப்போர் களில்மடிந்தவர்கள் நடுகல்லுக்கு உரியோர்கள் ஆவர்."

### போரில் இறந்தோர்

மனிதன் பிறக்கிறான், இடையில் வாழ்கிறான், இறுதியில் இறக்கிறான். இறந்த பிறகு புகழ் ஒன்று தான் என்றும் அழியாமல் இருப்பது ஆகும். எனவே இப்புகழ் பெறவும் தன் நாட்டைக் காக்கவும் தன் உயிரைப் பொருட்படுத்தாமல் போர்க்களத்தில் போர்ப் புரிந்து உயிர் நீத்தோர்களும் நடு கல்லுக்குரியோர்கள் ஆவர்.[47]

### வடக்கிருந்து உயிர் நீத்தோர்

வடக்கிருத்தல் என்பது சமண சமயக்கொள்கை. வடக்குத் திசையை நோக்கிச் சாகும் வரை உண்ணாமல் நோன்பு இருந்து உயிர்விடுவது என்பது இதன் பொருளாகும். "வடக்கிருத்தல் எப்போது செய்ய வேண்டும் என்பதை அருங்கலச் செப்பு என்னும் சமண சமய நூல் இவ்வாறு கூறுகிறது.

> "இடையூறு ஒழிவில்நோய் மூப்பு இவை வந்தால்
> கடை துறத்தல் கல்லே களை"

அஃதாவது பொறுக்க முடியாத மனவேதனைத் தருகிற இடையூறு, தீராத நோய், மிகுந்த மூப்பு, இவை உண்டான காலத்து கல்லேகளை செய்து உயிர் விடலாம் என்பது சமணர் கொள்கை" ஆகும். இவ் வாறு வடக்கிருந்து உயிர்விடுவோரும் நடுகல்லுக்கு உரியோர் ஆவர். அவர்களுக்கு நடுகல் செய்தனர்".

### பத்தினி பெண்டிர்

வீரத்தைப் பாராட்டும் வண்ணம் தோன்றிய நடுகல் காலப் போக்கில் மனிதனின் மற்ற பண்புகளையும்

பாராட்டும் நிலையில் தோன்றிவிட்டன. அவ்வகையில் பத்தினிப் பெண்ணுக்கு நடுகல் எடுத்தமை ஆகும். இவ்வழக்கு சங்க காலத்தில் இல்லை. சிலம்பில் தான் முதன் முதலில் காணப்படுகிறது. இதனால் பத்தினிப் பெண்ணும் நடுகற்குரியவர் ஆவர்.[50]

## சங்க இலக்கியத்தில் நடுகல்

சங்க காலத்தில் நடுகல் நடும் வழக்கம் பரவலாக இருந்தமை சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியலாம்.

நடுகல் என்றால் 'நட்டகல்' என்று பொருள். இதனை 'நட்டபோலும் நாடா நெடுங்கல்' என்று அகநானூறு கூறுகிறது[51]. நடுகல் வீரர்களைக் 'கடவுள்' என்று நம்பினர்[52]. நடுகல் வழிபாடு விடியற் காலையில் செய்தனர்[53]. நடுகல் மாமரத்தின் நிழலில் நட்டு அதில் 'அவன்' பெயர் உலகமறிய எழுதிவைப்பர்[54]. அக் கல்லை நீராட்டி[55] மஞ்சள் பூசி[56] அதிரல் மலர் களையும்[57], வேங்கைப் பூவைப் பனை ஓலையால் அலங்கரித்துத் தொடுத்த மாலையினையும்[58] சூட்டுவர். மற்றும் மயிற்தோகையால் அலங்கரித்துத் துடி அடித்துக், கள்ளோடு, செம்மறிக் குட்டியைப் பலியிட்டு,[59] நறுமணப் புகை[60] போட்டும், நெய்விளக் கேற்றியும்[61] மக்கள் கைகூப்பிக் கும்பிட்டு[62] வழி பட்டனர். நடுகல்லை வழிபட்டால் மழை பொழியும் என்று நம்பினர்[63]; எனவே நடுகல்லை வழிபட்டனர்.

இவ்வாறு நடுகல் நடும் வழக்கம் பண்டையக் காலத்தில் இருந்து வருகிற ஒரு வழக்கம் ஆகும்.

## சிலம்பில் நடுகல்

நடுகல் எடுக்கும் வழக்கம் ஆண்களுக்கு உரிய ஒன்றாக இருந்தமை சங்க இலக்கியங்கள் மூலம் அறிய லாம். பெண்களுக்கு நடுகல் எடுத்தமைப் பற்றி இலக்கியங்களில் குறிப்பேதும் இல்லை. இதனை

உறுதி செய்வதுபோல் "தென்னிந்தியாவில் கணவனை இழந்த பெண்டிர் தீப்பாய்ந்து இறந்தபின் அவர் களுக்குக் கல்நடும் வழக்கம் பரவலாக இருந்தது; எனினும் அதனை இலக்கியங்கள் கூறவில்லை என்று கூறிய ஜி. எஸ். ஹார்ட், அடிக்குறிப்பில் கண்ணகிக்குக் கல்நட்டதைக்கூறுகிறார்"". இதனால் சிலம்பில் தான் முதலில் பெண்ணுக்கு நடுகல் எடுத்தமைப் பற்றிக் குறிப்பு வருகிறது.

"பெண்ணுக்குப் பெருமை தராத சமண பௌத்தம் தமிழகத்தில் வேரூன்றத் துவங்கிய காலத்தில் பெண் ணுக்கு ஏற்றம் கொடுத்துப் பாடுகிறது சிலம்பு"". மேலும் உயிருடன் மேலோகம் சென்ற பெண்ணுக்கு நடுகல் எடுத்தமைபற்றி கூறுகிறது. இந்நடுகல் வழி பாடு தொல்காப்பியர் கூறிய காட்சி, கால்கோள், நீர்ப் படை, நடுதல், வாழ்த்தல் என்ற இலக்கணத்தோடு" முறையே கூறியுள்ளார். இவற்றைப் பற்றி இனி ஆய்வோம்.

### காட்சி

கற்புத் தெய்வமான கண்ணகிக்குச் சிலைச் செய்ய கல்லைத் தேர்ந்தெடுக்கத் தேடிச் சென்று காணுதலைப் பற்றிய காதையே காட்சிக் காதை ஆகும். காட்சி என்பதற்குக் 'கற்காட்சி' என்று அடியார்க்கு நல்லாரும்[7] 'கற்கொள்ள மனத்தால் நிச்சயித்தல்' என்று அரும்பத உரையாசிரியரும் விளக்கம் கூறு கின்றனர்".

மலைவளத்தைக் கண்டுகளிக்க தன் பரிவாரங் களுடன் வருகிறான் செங்குட்டுவன். அரசனைக் காணக் குறவர்கள் யானைவெண்கோடு, வெண்சா மரை, சிறந்த கனிகள் முதலியனவற்றைக் கொண்டு வந்து அரசனுக்குக் கொடுத்து, அவனை வணங்கிய பின்பு "வேந்தனே நாங்கள் வாழும் மலை பகுதியில் காட்டு வேங்கையின் கீழே மங்கை ஒருத்தி ஒரு மார்

பகத்தை இழந்தவளாய் துயரத்துடன் நின்று இருந்தாள். அப்போது தேவர்கள் வந்து தன் கணவனைக் காண் பித்து அவளை விண்ணுலகத்திற்குக் கொண்டு சென்றனர். அவள் எந்நாட்டாளோ? யார் மகளோ? அறியோம். இந்த அதிசய நிகழ்ச்சி உமது நாட்டில் நடந்தது" என்று கூறியதை இளங்கோவடிகள்,

"வானவர் போற்ற வானகம் பெற்றனள்
எந்நாட் டாள்கொல் யார்மகள் கொல்லோ
நின்னாட் டியாங்க ளினைப்பினு மறியேம்"[10]

இப்பாடல் மூலம் உணர்த்துகிறார்.

இதைக் கேட்ட அரசன் வியப்புற்று அருகிலிருந்த சாத்தனாரை நோக்க அவர் நடந்த நிகழ்ச்சியைக் கூற மன்னன் அறிகிறான். பின்பு தன் தேவியின் கூற்றுக்கு ஏற்ப கண்ணகிக்கு சிலை வைக்க எண்ணுகிறான். அருகிலிருந்த நூலறி புலவர் பொதியிற் கல்லெடுத்துக் காவிரி நீர்ப்படை செய்யலாம் என்று செங்குட்டுவன் தன் வீரத்திற்கு இமயத்தில் கல்லெடுத்துக் கங்கையில் நீர்ப்படை செய்வதே பெருமை என எண்ணி சிலைக்குக் கல் எடுக்க இமயம் நோக்கிப் படை யெடுத்துச் செல்கிறான்.

## கால்கோள்

கால்கோள் என்பது கண்ணகி படிமத்தைச் செதுக்க இமயத்தில் கல் எடுப்பது ஆகும். கால்கோள் என்பதற்கு உரையாசிரியர்கள் தரும் விளக்கம் "கற் கொண்ட காதை, கற்கோள் கால்கோள் என விகாரம்" என்று அடியார்க்கு நல்லாரும் "கடவுள் வடிவெழுதத் தொடங்குதல்"[11] என்று அரும்பத உரையாசிரியரும் விளக்கம் தருகிறார்கள்.

கண்ணகி சிலைக்குக் கல் எடுப்பதற்கு வடதிசை நோக்கிப் போர்செய்ய இதுவே தக்க நேரம் என நிமித்திகன் கூற அதனைக் கேட்ட அரசன்,

"வாளும் குடையும் வடதிசைப் பெயர்க"[13]

என்று ஆணையிட்டான். அதைக் கேட்டதும் உலகமே நடுங்குமாறு போர் வீரர்கள் எழுந்தனர். அவர்களுடன் ஐம்பெருங்குழுவும், எண்பேராயமும் கரும வினைஞரும், கணக்கியல் வினைஞரும், தரும வினைஞரும், தந்திர வினைஞரும் முதலியோர் புறப் பட்டனர். போர் வீரர்கள் போருக்குப் போகும் முன் வெற்றித் தெய்வமான கொற்றவையை வணங்கிச் செல்வதைத் தொல்காப்பியம் கூறுவது போல் சிலம்பில் போருக்குப் போகுமுன் செங்குட்டுவன் தான் வழிபடும் சிவபிரானது திருவடிகளை வணங்கியும், வஞ்சிமாலை சூடிய மணமுடியைத் தன் தலையில் தரித்துக் கொண்டும், திருமால் பிரசாதத்தை வாங்கித் தன் மணிப் புயத்தில் ஏந்தியவனாகப் போருக்குப் புறப்பட்டு[15] நீலகிரி சேர்ந்தனர். அவ்விடத்தில் சுத்தர்கள் குடகர்கள் வந்து மன்னனை வாழ்த்தியும் பலவகை கூத்துக்கள் ஆடியும் மகிழ்வித்தனர். போருக்குத் தேவையான உணவுப் பொருள், வாகனங்கள் முதலியன கொடுத்து அரசனை வணங்கி

"வடதிசை மருங்கின் வானவன் பெயர்வது
கடவுள் எழுத ஓர் கற்கே ஆயின்
ஆங்கிய இமையத்துக் கற்கால் கொண்டு
வீங்குநீர்க் கங்கை நீர்ப்படை செய்து"[16]

என்று வாழ்த்தினர். அங்கிருந்து புறப்பட்டு வடநாடு அடைந்து கன்னரின் உதவியுடன் மரக்கலங்கள் மூலம் கங்கை ஆற்றைக் கடந்து சென்று உத்திர நாட்டை அடைந்தார்கள். அங்கு உத்திரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரன் முதலிய வடதிசை மன்னவரெல்லாம் சேரனோடு நட்பு கொண்டவராக வந்து சேர்ந்தனர். கனகவிசயர் போருக்கு வரவே அவனுடன் போர் செய்து அவனை வென்றான். பின்பு செங்குட்டுவனின் தந்தை இமயவரம்பன் இதற்கு முன் வில்லினைப் பொறித்த இமயத்திலிருந்து அவன் கண்ணகிக்குக் கல்லெடுக்கிறான்.[17]

**நீர்ப்படை**

பத்தினி தெய்வமான கண்ணகிக்கு இமயத்தில் கல் கொண்ட பின்பு அதை போரில் தோற்று பிடிபட்ட கனகவிசயர் தலைமேல் சுமந்து வரச் செய்து கங்கை யாற்றுக் கரை அடைந்தனர். பண்ணியப் படைவீரர் முன்னிலையில் நூல்திறன் மக்களைக் கொண்டு கங்கையாற்றில் நீராட்டினர். இதனை

> "கங்கைப் பேர்யாற்றுக் கரையகம் புகுந்து
> பாற்படு மரபிற் பத்தினிக் கடவுளை
> நூற்றிறன் மாக்களி னீர்ப்படை செய்து"[10]

இப்பாடல் வரிகளின் வாயிலாக உணரலாம்.

இவ்வாறு முறைப்படி நீர்ப்படைச் செய்த கல்லினைத் தன் நாட்டுக்குக் கொண்டு வருகிறான் சேரன் செங்குட்டுவன்.

**நடுகல்**

செங்குட்டுவன் போரில் வெற்றிப்பெற்று வெற்றிச் சின்னமாக கண்ணகிக்கு 'நடுகல்' எடுத்துக் கொண்டு சேரநாடு வருகிறான். பாண்டிய மன்னன் முசிறிப் பட்டினத்தை முற்றுகையிட்டுப் போரில் வெற்றி பெற்று, வெற்றியின் சின்னமாக அங்கிருந்து சிற்பத்தை எடுத்து வந்து தன்னுடைய தலைநகரமான மதுரையில் வைத்த செய்தியை அகநானூறு கூறுகிறது.[11] இதனால் போரில் வெற்றிப் பெற்றவன் தோற்றவர் நாட்டில் இருந்து படிமங்களைக் கவர்ந்து வருவது மரபாகக் கொண்டிருந்தனர் என்பது புலப்படுகிறது.

சேரநாடு வந்த அரசனுக்கு பலவித வரவேற்பும், கூத்தும் நடைபெற்றது. பின்பு அரசன்

> "நான்மறை மரபி னயந்தெரி நாவின்
> கேள்வி முடித்த வேள்வி மாக்களை
> மாடல் மறையோன் சொல்லிய முறைமையின்
> வேள்விச் சாந்தியின் விழாக்கொள வேவி"[12]

இவ்வாறு நான்மறைகள் உணர்ந்த நாவினரால் மாடல் மறையோன் சொல்லிய முறைமையின்படியே வேள்வி யும், விழாவினையும் செய்யுமாறும் செங்குட்டுவன் கூறினான். பின்னர் தன்னால் சிறைப்படுத்தப்பட்ட ஆரிய மன்னராகிய கனகவிசயரைச் சிறை விடுத்துச் சகல வசதிபெற்ற 'வேளாவிக்கோ மந்திரம்' மாளிகை யில் வசிக்கட்டும், கண்ணகி விழா முடிந்ததும் அவரை சிறைவிடுத்து விடுவோம், என்று ஆணையிட்டான்.

கண்ணகிக்கு சிலை எடுக்கும் செய்தியை மூவேந் தருக்கும் செய்தி அறியுமாறு செய்தான். பிறகு கைத் தொழில் வல்லுநரால் கண்ணகி சிலைச் செய்து, அதற்கு நாள்தோறும் வேள்வியும், விழாவும் செய்யுமாறு ஏவினான்.

## வாழ்த்துக் காதை

கண்ணகி சிலைக்கு மங்கலம் செய்து அலங்கரித்த பிறகு அக்கோயிலில் சிற்றரசர்கள் எல்லாம் தத்தம் திறைகளைக் கொண்டு வந்து வைத்து வணங்கினர். மற்றும் கண்ணகி செவிலித்தாய், அடித்தோழி, தேவந்தி, ஆகிய மூவரும் சேர்ந்து கண்ணகிக் கோயிலுக்கு வந்தனர். சேரனைக் கண்டு, கண்ணகிக் கும் தமக்கும் உள்ள தொடர்புகளை முறையே உரைத்தனர்.[19] கண்ணகியின் துயர செயலைக் கேட்டு மாமனாகிய மாசாத்துவானும், தந்தை மாநாய்கனும், மாதவி, அவனுடைய மகள் மணிமேகலை துறவு பூண்ட செய்திகளை அப்பத்தினிக் கடவுள் முன் சொல்லினர்.

செங்குட்டுவனுக்குக் கண்ணகி காட்சி அளித்துப் பின், பாண்டியன் குற்றமற்றவன், நான் அவனுடைய சொந்த மகள் ஆவேன் என்று கூறுகிறாள். இதனை

> "தென்னவன் றீதிலன் றேவர்கோன் றன்கோயில்
> நல்விருந் தாயினா னானவன் றன்மகள்"[20]

இவ்வரிகள் வாயிலாக அறியலாம்.

கண்ணகி தன் தோழிகளை முருகன் குன்றத்தில் விளையாட வாருங்கள் என அழைக்க, தோழிகள் ஒன்றுகூடி சேரனை, பாண்டியனை, சோழனை, புகழ்ந்து பாடி விளையாடினர். கடைசியில் கண்ணகி தெய்வம் செங்குட்டுவனை நீடுழி வாழ்க என்று வாழ்த்தியது என்பதைப் பின்வரும் பாடல் மூலம் அறியலாம்.

"நீணில மன்னர் நெடுவிற் பொறையன்னல்
தாள்தொழார் வாழ்த்தல் தமக்கரிது சூமொளிய
எங்கோ மடந்தையும் ஏத்தினாள் நீடுழி
செங்குட்டுவன் வாழ்க என்று"[51]

## வரந்தரு காதை

வரந்தரு காதையில் கண்ணகி தெய்வம் வரம் அளித்தல் பற்றிய செய்தி இடம் பெறுகிறது.

தேவந்தி மணிமேகலையின் துறவினைப்பற்றிய செய்திகளை செங்குட்டுவனுக்கு முறையாகக் கூறுகிறாள்.[52] பிறகு தேவந்தியின் மேல் சாத்தன் என்னும் தெய்வம் ஏறி ஆடி, அத்தெய்வத்தின் தீர்த்தம் இரட்டைப் பெண்கள் மீது தெளிக்க, அவர்கள் முற்பிறப்பில் கண்ணகி தாயும், கோவலன் தாயும் ஆவார்கள். அவர்கள் இருவரும் தன் முன்பிறப்பு வாழ்வைக் கூறிப் புலம்பினர். பின்பு குடகுநாட்டுக் கொங்கரும், மாருவ நாட்டு வேந்தரும், கயவாகு வேந்தனும் கண்ணகி தெய்வத்தை தமது நாட்டிற்கு வருமாறு வேண்டினர். அப்போது

"தந்தேன் வரமென் றெழுந்த தொருகுரல்"[53]

இதனைக் கேட்டு அனைவரும் மகிழ்ந்தனர்.

இவ்வாறு சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குச் சிறப்பாக நடுகல் நாட்டு விழா கொண்டாடினான்.

## பாண்டியன் நாட்டில் விழா

கோவலன் இறந்ததில் இருந்து பாண்டிய நாட்டில் மழையின்றி உணவுப்பொருள் இல்லாமல் மக்கள்

பசிப்பிணியால் மிகவும் துன்புற்றனர். கொடிய தொழு நோயும் கோடைக் கொப்புளமும் இடைவிடாது மக்களைத் துன்புறுத்தின. இவற்றைப் போக்க அந் நாட்டு மன்னனான வெற்றிவேற் செழியன் ஆயிரம் பொற்கொல்லரைப் பத்தினி தெய்வமான கண்ண கிக்குப் பலியிட்டு விழா எடுத்தான். அன்றுமுதல் மழை பொழிந்து வறுமையும் நோய்களும் நீங்கி மக்கள் இன்பம் அடைந்தார்கள்."

## கொங்கு நாட்டில் விழா

பாண்டியன் கண்ணகிக்கு விழா செய்ததால் விளைந்த பயன் கேட்ட கொங்கு இளங்கோசரும் தன் நாட்டிலும் விழாவும் சாந்தியும் செய்தான். அதனால் அந்நாட்டில் மழை பொழிந்து நாடு வளமடைந்தது."

## இலங்கை நாட்டில் விழா

கயவாகு மன்னனும், பாண்டியனும் கொங்கு இளங்கோசரும் விழா செய்தமையால் அவர்கள் அடைந்த பயனைக் கேட்டு இலங்கை நாட்டில் நங்கைக்கு நாள்தோறும் பலியிடும் கோட்டம் கட்டிப் பின்பு துன்பத்தைப் போக்கி வரம் தருவாய் என்று ஆண்டு தோறும் ஆடித்திங்களிலே பெரிய விழாக் கொண்டாடினான். அதனால் அந்நாட்டில் குறை யின்றி மழை பொழிந்து நாடு வளம் பெற்றது."

## சோழ நாட்டில் விழா

பாண்டியன், கொங்கு இளங்கோசர், கயவாகு ஆகிய மன்னர் கண்ணகிக்கு செய்த விழாவால் அடைந்த பயன்களை எல்லாம், சோழன் பெருங்கிள்ளி அறிந்தான். எத்திறத்தானும் வரம் தரும் இளம் பத்தினித் தெய்வம் ஆவாள். என்று எண்ணிப் பெருங் கிள்ளி உறையூரில் பத்தினிக் கோட்டம் கட்டி நாள்

தோறும் விழா நடத்தினான். அதனால் சோழ நாடு எல்லா வளமும் பெற்றது.[37]

இவ்வாறு சேரன், சோழன், பாண்டியன், கயவாகு முதலிய மன்னர்கள் கண்ணகிக்கு விழாச் செய்து அவள் மனம் சாந்தி அடையச் செய்தனர். இதனால் அவர்களுடைய நாட்டில் பசி, பிணி, இன்றி மக்கள் இன்புற்று வாழ்ந்து வரத் தொடங்கினர்.

இன்றைய நாட்களில் மழை வேண்டியும், மாரியாத்தா, (கொப்புளங்கள்) போக வேண்டி வணங்கும் மாரியம்மன் வழிபாட்டின் நோக்கமும். கண்ணகி வழிபாட்டின் நோக்கமும் ஒன்றாக இருக்கிறது. எனவே கண்ணகி வழிபாடே காலப் போக்கில் மாரியம்மன் வழிபாடாகி இருக்கலாம் என்ற ஒரு கருத்து நிலவி வருகிறது.

முடிவுரை

செங்குட்டுவன் பிறந்தநாள் அன்று வெள்ளணி அணிந்து கொண்டாடினான். அன்று வரிகள் நீக்கிய தாலும், தளை அகற்றியதாலும் அனைவரும் இன்புற்றுக் கொண்டாடினர்.

மணிமேகலை பெயர் சூட்டு விழாவின் போது, பொன்னும் பொருளும் இரவலருக்கு வழங்கினர்.

அரங்கேற்று விழாவின் மூலம் மாதவி, சயந்தன் முன்பிறப்பு வரலாறு அறியலாம்.

ஐந்துவயதில் நடனம் கற்க ஆரம்பித்துப் பன்னிரண்டாவது வயதில் அரசவையில் அரங் கேற்றுவர் என தெரிய வருகிறது.

சிறந்த ஆடல் ஆசிரியர், இசையாசிரியர், பாட லாசிரியர் முதலியோர்கள் மாதவிக்கு ஆசிரியர்களாக அமைந்து இருந்தனர்.

அரங்கேற்றம் முடிந்ததும் அவர்க்குப் பட்டமும் பொருளும், தலைக்கோலும் கொடுப்பது வழக்கமாக மன்னர் கொண்டிருந்தனர் என்பதை அறியலாம்.

திருமணம் செய்யும் வழக்கம் பொய்யும் வழுவும் தோன்றிய பின்னரே தோன்றியது. அதற்கு முன்பு இல்லை.

கோவலன் கண்ணகி திருமணத்தில் தாலி கட்ட வில்லை. மங்கல அணி என்பது இயற்கையழகு ஆகும்.

சிலம்பில்தான் பெண்ணுக்கு நடுகல் நட்டமை தெரியவருகிறது. அதுவும் தொல்காப்பியர் கூறிய இலக்கணத்தோடு செய்தமைப் புலப்படுகிறது.

வடநாடு சென்று போரில் வெற்றிபெற்று கண்ண கிக்குக் கல் எடுத்து வந்தமையால் கண்ணகி புகழ் வட நாட்டிலும் பரவியிருக்கலாம் என நினைக்க இடம் உண்டு.

கண்ணகி வழிபாடு பிற்காலத்தில் மாரியம்மன் வழிபாடாக ஆகியது என்று கூறலாம்.

## குறிப்பெண் விளக்கம்

1. ச. வே. சுப்பிரமணியன், இளங்கோவும் கம்பனும், ப. 146.
2. மது. 615-619
3. சிலம்பு. 27:229.
4. தொல். பொருள்., நச்சினார்க்கினியர் உரை, ப. 285.
5. சிலம்பு. 27:28–29.
6. சிலம்பு. 27:40–44.
7. சிலம்பு. 15:35–41.

8. பெ. திருஞானசம்பந்தன், இந்திய-எழிற்கலை, ப. 5.
9. சிலம்பு. 3:1-3.
10. சிலம்பு. 3:8-11.
11. மாயவன் ஆடிய அல்லி, சிவன் ஆடிய கொட்டி, ஆறு முகன் ஆடிய குடை, கண்ணன் ஆடிய குடம், சிவன் ஆடிய பாண்டரங்கம், கண்ணன் ஆடிய மல்லாடல், முருகன் ஆடிய துடி, இந்திராணி ஆடிய கடையம், காமன் ஆடிய பேடி, துர்க்கை ஆடிய மரக்கால், திரு மகள் ஆடிய பாவை ஆகிய ஆடல்கள்.
12. சிலம்பு. 3:22:23.
13. சிலம்பு. 3:26-28.
14. சிலம்பு. 3:37-44.
15. சிலம்பு. 3:98-100.
16. சிலம்பு. 3:99-102.
17. ஒருமுகவெழினி, பெருமுகவெழினி, கரந்தவரவெழினி வே. கபிலன், காவியமும் ஓவியமும் ப. 42.
18. சிலம்பு. 3:114-120.
19. சிலம்பு. 3:131-136.
20. சிலம்பு. 3:161-165.
21. மு. வரதராசன், மாதவி, ப. 26
22. புறம் 341:10-12, அக. 112:11-16, ஐங். 61:4-5.
23. எஸ். சதக்கத்துல்லா, சங்கத் தமிழர் திருமணமுறை, ஆய்வுக் கோவை, பதினோராவது கருத்தரங்கு, தொகுதி. 3, ப. 87.
24. தொல். பொருள்., நூ. 143.
25. சிலம்பு. 1:24, 1:34.
26. ப. அருணாசலம், சிலப்பதிகாரச் சிந்தனை, ப. 61.
27. சிலம்பு. 1:41-42.
28. சிலம்பு. 1:47.
29. ம. பொ. சிவஞானம் (கண்ணதாசன், வனவாசம் ப. 228)

30. ராசமாணிக்கம், கண்ணதாசன் (கண்ணதாசன், வனவாசம், ப. 226, 225-234)

31. அ. உ., ப. 35, 52, 70.

32. அ. உ., ப. 125.

33. சிலம்பு. 1: 46-47,

24· ... "அத்தனையோடும் ஊரில் இயற்கை அழகு எங்கும் எழுந்தது" — கண்ணதாசன், வனவாசம்,, ப. 229.

35. சிலம்பு. 2. 62-64.

36. அ. உ., ப. 125.

37. சிலம்பு. 1:51-53.

38. சிலம்பு. 23: 181-182.

39. கே. கே. பிள்ளை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், பப. 128-129.

40. அக. 136.

41. சிலம்பு. 1: 61-62.

42. புற. பா. 221, 223, ஐங். 233: 3-4.

43. காட்சிக் காதை, கால்கோட் காதை, நீர்ப்படைக் காதை, நடுகற் காதை, வாழ்த்துக் காதை, வரந்தரு காதை.

44. நா. வானமாமலை, ஆராய்ச்சி, "நடுகற்களும் நம்பிக்கைகளும்" ப. 10. (க. காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 249.)

45. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு (சங்க காலம்), ப. 125.

46. புற. 261: 11-14, அக. 269.

47. அக. 53: 9-12, ஐங். 352: 1-2.

48. மயிலை சீனி வேங்கடசாமி, சமணமும் தமிழும், முதற்பகுதி, ப. 181.

49. புற. 223:2.

50. சிலம்பு. 28:218-225.

51. அக. 269:7.

52. அக. 35:7-8, புற. 335: 11-12.

53. புற. 329: 2, அக. 289: 2-3

54. மலைபடு. 394-396.
55. புற. 329: 3.
56. அக. 269: 9.
57. அக. 289: 2-3.
58. புற 265: 2-5.
59. அக. 35: 8-9.
60. புற. 329: 4.
61. புற. 329: 3.
62. புற. 306: 4.
63. புற. 263 (புறநானூறு மூலமும் பழைய உரையும்)
64. G.L. Hart, *The Poems of Ancient Tamil*, P. 42.
65. பொன். சௌரிராசன், *சித்திரைச் சிலம்பு*, ப. 70.
66. தொல். பொருள். 63: 9-21.
67. அ. ந. உ., ப. 28.
68. அ. உ., ப.
69. சிலம்பு. 25: 60-62.
70. அ. ந. உ., ப. 28.
71. அ. உ., ப. 542.
72. சிலம்பு. 26: 64-67.
73. சிலம்பு. 26: 150-153.
74. சிலம்பு. 25: 1-5, 28:136.
75. சிலம்பு. 27: 14-16.
76. அக. 149: 11-14.
77. சிலம்பு. 28: 191-194.
78. சிலம்பு. 28: 191-194.
79. சிலம்பு. 29: பா. 2, 3, 4.
80. சிலம்பு. 29: பா. 10. வரி. 1-2.
81. சிலம்பு 29: பா. 30 வரி. 2-5.
82. சிலம்பு. 30: 6-9.
83. சிலம்பு. 30: 164.
84. உ.க., — 1.
85. உ.க., — 2.
86. உ.க., — 3,
87. உ.க., — 4.

## முடிவுரை

'சிலப்பதிகாரத்தில் விழாக்கள்' என்ற இவ்வாய்வேட்டில் சிலப்பதிகாரத்தில் இடம்பெறும் விழாக்களும் அவற்றைக் கொண்டாடும் முறையும் விளக்கப் பெற்றுள்ளன. அத்துடன் சங்க இலக்கியங்களில் காணப்படும் விழாவைப் பற்றியும் அறியலாம். மேலும் விழா குறித்தும் விளக்கப்பட்டுள்ளது.

இவ்வாய்வு முயற்சி பிற காப்பியங்களில் இடம் பெறும் விழாக்களோடு ஒப்பிடவும், மதங்களிடையே உள்ள விழாக்களை ஒப்பிட்டு ஆய்வதற்கும் ஆய்வுச் சிக்கல்களை உருவாக்க முன்னோடியாக அமைகிறது.

# துணைநூற் பட்டியல்

## தமிழ் நூல்கள்


| | |
|---|---|
| | அகநானூறு — களிற்றியானை நிரை, பெருமழைப்புலவர் உரை, கழகம், சென்னை-1, மு.ப. — 1970. |
| | அகநானூறு — மணிமிடை பவளம், நித்தலக்கோவை, பெரு மழைப் புலவர் உரை, கழகம், சென்னை-1, மு. ப. — 1970. |
| அருணாசலம், ப., | சிலப்பதிகாரச் சிந்தனை, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5, மு. ப — 1971. |
| இராசமாணிக்கனார், மா., | பத்துப்பாட்டு ஆராய்ச்சி, சென்னைப் பல்கலைக் கழகம், மு. ப. — 1970. |
| இராசகோபால், கோவி., | காமன் கதைப் பாடல் — ஓர் ஆய்வு, மாருதி பதிப்பகம், சென்னை-14, மு. ப. — 1985. |
| ————————, | இறையனாரகப் பொருள் உரை. பவானந்தர் கழகம், சென்னை, 1939, |
| ————————, | ஐங்குறு நூறு மூலமும், சோமசுந்தர னார் உரை, கழகம், சென்னை-1, மறுபதிப்பு-1966. |
| கண்ணதாசன்., | வனவாசம், வானதி பதிப்பகம், சென்னை-17, எட்டாம் பதிப்பு — 1987. |
| ————————, | கலித்தொகை மூலமும், நச்சினார்க் கினியர் உரையும், பொ. வே. சோம சுந்தரனார், விளக்கம், கழகம், சென்னை-1, மறுபதிப்பு — 1970. |

காந்தி, க., தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், உலகத் தமிழா ராய்ச்சி நிறுவனம், சென்னை-29. மு. ப. — 1980.

————————, குறுந்தொகை, உ. வே. சாமிநாதை யர் பதிப்பு, நான்காம் பதிப்பு — 1962.

சண்முக சுந்தரம், சு., திருநெல்வேலி மாவட்ட நாட்டுப் புறப்பாடல்களில் சமுதாய அமைப்பு, காவ்யா, பெங்களூர், மு. ப. — 1980.

————————, சிலப்பதிகார மூலமும் அரும்பத உரையும் அடியார்க்கு நல்லாருரை யும், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், நிழற்படப் பதிப்பு — 1985.

————————, சீவக சிந்தாமணி மூலமும் நச்சி னார்க்கினியர் உரையும், உ. வே. சாமிநாதையர் ஆராய்ச்சி உரை யுடன், ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை, ஏழாம் பதிப்பு-1969.

சுப்பிரமணியன், ச. வே., இளங்கோவும் கம்பனும், உலகத் தமிழ்க் கல்வி இயக்கம், சென்னை-96, மு. ப. — 1986.

சோமலெ., தமிழ் நாட்டு மக்களின் மரபும் பண் பாடும், நேஷனல், புக்டிரஸ்ட், இந்தியா, 1975.

சௌரிராசன், பொன்., சித்திரச் சிலம்பு, பாரி நிலையம், சென்னை-1, மு. ப. — 1985.

சௌரி இந்தியாவின் கலையும் கலாச்சார மும், வானதி பதிப்பகம், சென்னை-17, 1983.

————————, திருக்குறள், மூலமும் ஓர் பழைய உரை, டாக்டர் உ. வே சாமி நாதையர் நூல் நிலையம், சென்னை-20, 1961.

திருஞானசம்பந்தன், பெ., இந்திய எழிற்கலை, பொன்விழா வெளியீடு, டாக்டர் எஸ். இராதா

கிருஷ்ணன் மெய்யுணர்வு மேல் நிலைக் கல்வி நிறுவனம், சென்னை பல்கலைக் கழகம், 1977.

————————, திருப்பாவை, வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியார் கம்பெனி, சென்னை-5, இரண்டாம் பதிப்பு— 1960.

————————, திருமுருகாற்றுப்படை, உ. வே. சாமி நாதையர் பதிப்பு, வ. வே. சாமி நாதையர் நூல் நிலையம், சென்னை, ஏழாம் பதிப்பு — 1974.

————————, தேவாரம் இரண்டாம் திருமுறை, ஞானசம்பந்தம் அச்சகம், தருமபுரம், 1954.

————————, தொல்காப்பியம் பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, கழகம், சென்னை-1, 1967.

தொல்காப்பியம் - பொருளதிகாரம், நச்சினார்க்கினியர் உரை, கழகம், சென்னை-1, 1969.

நஜன் (நடராஜன், எஸ்) தமிழர் பண்டிகைகளும் பண்பாடும், வானதிபதிப்பகம், சென்னை-17. மு. ப. — 1972.

————————, நற்றிணை மூலமும், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரையும் சைவ வித்தியாபாநு பாயன் யந்திரசாலை, சென்னை, இராவுச ஆண்டு.

————————, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், திருவேங்கடத்தான் திருமன்றம், சென்னை-14, இரண்டாம் பதிப்பு, 1981.

————————, நெடுநல்வாடை மூலமும், நச்சினார்க் கினியர் உரையும் கழகம், சென்னை-1, 1967.

————————, பட்டினப் பாலை, கழகம், சென்னை -1, 1967.

————————, பதிற்றுப்பத்து மூலமும் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை உரையும், கழகம், சென்னை-1, 1955.

பரமசிவானந்தம், அ.மு. தமிழ் நாட்டு விழாக்கள், தமிழ்க் கலைப் பதிப்பகம், சென்னை-30, ஐந்தாம் பதிப்பு-1980.

————————, பரிபாடல் மூலமும், பரிமேலழகருரையும், உ. வே. சாமிநாதையர் பதிப்பு, மூன்றாம் பதிப்பு — 1968.

பாலசுப்பிரமணியன், சி. 1. முருகன் காட்சி, பாரி நிலையம், சென்னை-1, மு. ப. — 1966

2. இலக்கியக் காட்சிகள், நறுமலர்ப் பதிப்பகம், சென்னை-29, மு. ப. — 1980.

பிள்ளை, கே. கே. தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, மு. ப. — 1972.

————————, புறநானூறு மூலமும் பழைய உரையும், உ. வே. சாமிநாதையர், (பதிப்பாசிரியர்), உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை-41, ஏழாம் பதிப்பு-1971.

————————, பெருங்கதை, உ. வே. சாமிநாதையர் உரை, டாக்டர். உ. வே. சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடு, சென்னை-4, நான்காம் பதிப்பு-1968.

————————, பெரும்பாணாற்றுப்படை, பொ. வே. சோமசுந்தரனார் உரை, கழக வெளியீடு, மறுபதிப்பு-1967.

————————, மணிமேகலை மூலமும் அரும்பத உரையும், உ. வே. சாமிநாதையர் ஆராய்ச்சிக் குறிப்பு, ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை.

மாருதிதாசன் இந்து சமயக் கருத்துக்கள், நர்மதா பதிப்பகம், சென்னை-17, மு. ப. — 1981.

முத்துராசன், கு. சங்க காலம், தேன் தமிழ்ப் பதிப்பகம், சேலம், மு. ப. — 1980.

வரதராசன், மு. மாதவி, பாரி நிலையம், சென்னை-1, 1955.

வேங்கடசாமி. சீனி மயிலை. சமணமும் தமிழும், முதற்பகுதி, கழகம், சென்னை-1, ம. ப. — 1970.

## அகராதி — கலைக்களஞ்சியம்

அவினாசிலிங்கம், தி. சு. (ப. ஆ.) கலைக்களஞ்சியம் — தொகுதி — 1, தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு, சென்னை-5, மு. ப. — 1954.

அவினாசிலிங்கம், தி. சு. (ப. ஆ.) கலைக்களஞ்சியம் — தொகுதி — 3, தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு, சென்னை-5, மு. ப. — 1956.

அவினாசிலிங்கம், தி. தி., (ப.ஆ.) கலைக்களஞ்சியம் — தொகுதி - 6, தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு, சென்னை-5, மு. ப. — 1963.

அவினாசிலிங்கம, தி. சு., (ப.ஆ.) கலைக்களஞ்சியம் — தொகுதி - 8, தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு, சென்னை-5, மு. ப. — 1963.

அவினாசிலிங்கம், தி. சு., (ப.ஆ.) கலைக்களஞ்சியம் — தொகுதி - 9, தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு, சென்னை-5, மு. ப. — 1963.

கழகப் புலவர் குழுவினர், கழகத் தமிழ் அகராதி, கழகம், சென்னை-1, இரண்டாம் பதிப்பு, 1969.

சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ஸி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை, இரண்டாம் பதிப்பு-1934.

பிங்கல முனிவர்., பிங்கல நிகண்டு, கழகம், சென்னை-1, மு. ப. — 1968.

————————, மதுரைத் தமிழ்ப் பேரகராதி முதல் பாகம், இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன், சென்னை, இரண்டாம் பதிப்பு-1956.

————————, மதுரைத் தமிழ் பேரகராதி இரண்டாம் பாகம், இ. மா. கோபால கிருஷ்ணக் கோன், சென்னை, இரண்டாம் பதிப்பு-1956.

## கட்டுரைகள்


| | |
|---|---|
| அகரமுதல்வன், த., | ஆய்வுக்கோவை, 'சங்க இலக்கியத்தில் இந்திரன் வழிபாடு' பன்னிரண்டாவது கருத்தரங்கு, தொகுதி-ஒன்று, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற வெளியீடு. |
| இந்துவரதன் | ஆய்வுக்கோவை, 'தமிழ் இலக்கியத்தில் காமன் வழிபாடு', ஒன்பதாவது கருத்தரங்கு, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற வெளியீடு, 1977. |
| சஞ்சீவி, ந. (பொ. ஆ.) | பல்கலைப் பழந்தமிழ், 'பழந்தமிழும் பல்வகைச் சமயமும்', சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு, மு. ப. — 1974. பக். |
| சண்முகம், இராம., முதலியார் (பதிப்பாசிரியர் குழு) | நெஞ்சை அள்ளும் சிலம்பு, 'சிலம்பில் சமயம்', மதுரை காமராசர் பல்கலைக் கழக அஞ்சல் வழித் தொடர்கல்வித் தமிழ்த்துறை வெளியீடு, மு. ப. — 1983. பக். 137 — 150. |
| சதக்கத்துல்லா, எஸ். | ஆய்வுக்கோவை, 'சங்கத்தமிழர் திருமண முறை', பதினோராவது கருத்தரங்கு, தொகுதி — மூன்று, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற வெளியீடு, 1979, பக். 87-91. |
| பாபுஜி, கா. மு. | ஸப்தகிரி, 'பொங்கல் விழா' திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி, ஜனவரி-1988, இதழ்-8, மலர்-18, பக். 41-42. |


## ENGLISH BOOKS


| | |
|---|---|
| Arunachalam, M. | *Festivals of Tamil Nadu*, Ga vidyalayam, Tiruchitram First Edition 1980. |

Hart, G. L. — *The Poems of Ancient Tamil*, University of California, London, First Edition-1975.

Pillay, K. K. — *A Social History of the Tamil, Part.* I, University of Madras, 1969.

## DICTIONERIES AND ENCYCLOPAEDIAS

Benjamin Walker. — *Hindu World*, An encyclopaedic survey of Hinduism, Volume-1.

Chidambaranatha Chettiar (A. C.) — *English Tamil Dictionary*, University of Madras, 1965.

——————————, *Encyclopaedia Britannica*, Volume-9, Encyclopaedia Britannica Inc William Benton, Chicago 1972.

Maria Leach (E. D.) — *A Standard Dictionary of Folklore Mythology and Legends*, *Volume* III, Fung and wagnel Company, Newyork, 1950.

Saletore., R. N. — *Encyclopaedia of Indian Culture*, *Volume*. II, Sterling Publishers Private Ltd., New Delhi, 1982.

Seligman, R. A. Edwin, — *Robert Briffault Encyclopaedia of the Social Sciences* Volume. 5, The Macmillan Company, Newyork, 1963.

**PAPER**

Seethalakshmi, — *Papers on Tamil Studies*, International Institute of Tamil Studies, Madras-20, 1980.



## கா. மு. பாபுஜி

| | | |
|---|---|---|
| தோற்றம் | : | 31—12—1961 |
| | : | கொடிவலசை, செங்கை மாவட்டம் |
| பெற்றோர் | : | கா. முனுசாமி<br>கமலம்மாள் |
| கல்வி | : | மேல்நிலைக் கல்வி :<br>அரசினர் மேல்நிலைப் பள்ளி<br>அத்திமாஞ்சேரிப்பேட்டை. |
| | : | பட்டப்படிப்பு :<br>அரசினர் கலைக் கல்லூரி,<br>நந்தனம், சென்னை–35. |
| | : | இளங்கலை கல்வியியல் :<br>அண்ணாமலை பல்கலைக்கழகம். |
| | : | முதுகலை, நிறைஞர் (எம்.பில்) :<br>திருவேங்கடவன் பல்கலைக்கழகம்<br>திருப்பதி. |
| இப்போது | : | முனைவர் பட்ட ஆய்வாளர் தலைப்பு:<br>'எட்டுத்தொகை சிலப்பதிகாரம்,<br>சமுதாயம்'— ஓர் ஒப்பாய்வு |
| கட்டுரைகள் | : | பத்திற்கும் மேற்பட்டது. |